உ

பரமபதிதுணை.

சிவபெருமானும் பதினெண் சித்தர்களும்
திருவாய்மலர்ந்தருளிய
தமிழ்ச் சித்தர் நூல்களிலுள்ள
பச்சிலை மூலிகை சரக்குகளின் பொருள்களடங்கிய
தமிழ்ச்

# சித்த வைத்திய அகராதி.

இஃது
மதுரை, புதுமண்டபம் புத்தகவர்த்தகம்
“சித்தர் நூலாராய்ச்சிப் புலவர்”
இ. ரா. ம.
குருசாமிக்கோனரவர்களால்
ஷை சாஸ்திரங்களில் திரட்டி எழுதப் பெற்றதை,
சென்னைமாகாண சித்தவைத்தியசங்க அமைச்சர்
மறைத்திருவன் சுவாமி விருதை

## வி. சிவஞானயோகியவர்களால்

பார்வையிடப்பெற்று

ஷை இ. ரா. ம.
குருசாமிக்கோனர் அவர்களாற்றமது
ஸ்ரீ ராமச்சந்திரவிலாசம் அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பெற்றது.

விலை] ரிஜிஸ்டர்காபிரைட். [ரூபா 2-0-0

௳

1928

TITLE ONLY
S. M. PRESS, MADURA.



இ. ரா. ம. குருசாமி கோனர்,

புரோப்ரைட்டர், ஸ்ரீராமசந்திர விலாஸம் பிரஸ்,

புக்ஷாப், புதுமண்டபம், மதுரை.

பரமபதி துணை.

# முகவுரை.

உலகில் மக்கள் முதற் கட்டோன்றிய நிலம் இப்பொழுது இந்துமாக் கடல்மேவி யிருக்கும் தென் மதுரையைத் தலைநகராப் பெற்றிருந்த தமிழக நாப்பண் ணுள்ளதெனச் சங்க நூற்களினிடையும் ஆங்கிலப் புலவர் ஏக்கல் கூற்றாலும் நன்கு விளங்குகின்றது. பதிற்றுப்பத்து 2-ம் பதிகத்தில் "இமிழ் கடல் வேலித்தமிழகம் விளங்க" என்றும் நாவுக்கரசரால் "நாவலம் பெருந்தீவில் என்றும் கூறப்படுகின்றன. நாவலந்தீவகத்துள்ள தமிழகத்தில் தெற்கே குமரியாற்றுக்கும் பஃறுளி யாற்றுக்கும் இடையில் 700 காதம் (7000 மைல்) பரப்புள்ள பூப்பகுதியில் ஏழ்தெங்க நாடு முதலிய 49 நாடுக ளிருந்தன. சிவனார் அம்மையார்க்கும் நந்தியார்க்கும் 700000ம் பாட்டுக்களில் வைத்தியம் வாதம், கற்பம், வானூல், மந்திரம், யோகம், ஞானம், என்ற ஏழுபொருள்களையும் கூறியருளினர். திருமூலர் வைத்தியம் 600ல் "தனஞ்செயவீசன் தாய்க் கன்று சொன்னது, கனந்தேழு லட்சங் கரைகண்டு பார்த்தேனே" என்று கூறியுளார். அவற்றை,

"நவையறக் கேட்ட நந்திமாணவர்
ஆம்திருமூலர் அகத்தியர் சட்டை
நாதர் காலாங்கி நாதர் போகர்
ஓதுகொங்கணர் உரை கருவூரர்
தேரையர் மச்சர் திகழ்புண்ணாக்கர்
கோரு தன்வந்திரி கோரக்கர் பூகி
இடைக்காடர் ரோமர் இசைக்கும் புசுண்டர்
முடையில் புலத்தியர்" ஆகிய சித்தர்களும்,

அவர் மாணவர்களும் இலக்கக்கணக்கில் நூல்கள் செய்திருக்கின்றனர். மூலிகைகள், சரக்குவகைகள், 1008, பாடாணங்கள் 64, உப்பு வகைகள் 25, உலோகங்கள் 9, தாதுப் பொருள்கள், (உபசச் சரக்குகள்) 120, அவற்றின் சத்துக்கள், ஆகிய வைத்தியத்துக்கு வேண்டிய பொருள்களின் பேர்களும் முப்பூவின் பரி

டைப் பேர்களும் மா மூலிகைகளின் பேர்களும் நன்கு தெரிந்தா லொழிய உயர்ந்த மருந்துகள் செய்ய நமக்கு முடியாது.

உலகில் இயங்காத்தணைப் பொருள்கள் (தாவரம்) இருபது நூறுயிரம் உள்ளன. அவை முற்றும் கூறும் நூல்கள் ஒரு மொழியிலு மில்லை. ஒவ்வொரு மூலிகைகளின் வடிவம், நிறம், மணம், இலை, பூ, காய், பழம், குணம் முதலிய வற்றை நன்கு விளக்கக்கூடிய நூல் ஆங்கிலத்தில் இருந்து வருவது போலத் தமிழிலும் இருக்க வேண்டு மென்பது இன்றியமையாதது. சித்தர்கள் செய்திருக்கும் நிகண்டுகளிலுள்ள பெயர்களே அவ்வப் பொருள்களின் குணங்களை நன்கு விளக்குகின்றன.

நந்தியங் கடவுள் இற்றைக்கு (16000)ம் ஆண்டு களுக்கு முன் துவக்கிய முதற் சங்கத்திலேயே இருந்தவர். ஆதலால் தமிழ்ச் சித்தர் முதற் கழக காலத்தும், இடைக்கழக காலத்தும், கடைக் கழக காலத்தும், பல நூல்கள் செய்திருக்கின்றனர். முதற் கழகம் 4440, ஆண்டும் இடைக் கழகம் 3850, ஆண்டும் கடைக் கழகம் 1850, ஆண்டும் இருந்தன. அவற்றின் இடைக்காலத்தில் சென்ற பல ஆண்டுகள் போகக் கடைக்கழகம் முடிவுற்று இற்றைக் கேறக்குறைய 1800 ஆண்டுகளாகின்றன. உலோகங்களை யும் பாடாணங்களையும் மருந்துகளுக்குப் பயன்படுத்தலுக்கு இந்தியாவில் தமிழ்ச் சித்த வைத்திய நூல்களே உலகிலுள்ள எல்லாநாட்டு வைத்தியர்களுக்கும் வழிகாட்டியா யிருந்துவரு கின்றன.

வடமொழித் தன்வந்திரியார் காலம் இற்றைக்கு 1500, ஆண்டுகளாகின்றன. சரகர் அவர்க்கு முந்தினவர். கி. பி. முதல் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவர். வடமொழி அஷ்டாங்க இருதயம் கி. பி. 900ல், சாரங்கதர சங்கிதை கி. பி. 1300ல், பாவப்பிரகாசம் கி. பி. 1600ல், தோன்றின. கிரீக் தேச வைத்திய நூல்கள் கி. மு. 900ல், ஆலோப்பாதி (எதிருறை) என்று ஆங்கில வைத்தியம் 1755ல், ரோமர் மருத்துவம் கி. பி. 200ல், ஓமியோபாதி (ஒப்புறை) கி. பி. 1753ல், யூனானி மருத்துவம் கி. பி. 600ல், தோன்றின. வடமொழி வைத்திய பூர்வ நூல்களில் உலோகங்களின் நீறு, செந்தூரம், சுண்ணம், முதலியன கூறப்படவில்லை.

வைத்திய அகராதியில், 1, பொருளகராதி, 2, பேரகராதி, 3, குணவகராதி. 4, பொருள் வடிவகராதி. 5, தொகையகராதி, என ஐந்து தொகுப்புகளாக எழுதப் படவேண்டும். அவற்றில் மதுரை, புதுமண்டபம், புத்தக வியாபாரம் திரு. இ. ராம. குருசாமிக் கோனார் அவர்கள் யாத்து வெளிப் படுத்திய இவ்வகராதியில் பொருளகராதி, தொகையகராதி யென்ற இரண்டு பகுதிகள் அடங்கி யிருக்கின்றன. இவர் மற்றைப் பகுதிகளையும் எழுதி முடித்து அச்சியற்றி வெளியிட்டால் சித்த வைத்தியருக்கு மிகவும் பயனுண்டாகு மென்பதில் ஐயமின்று.

நமது கோனாரவர்கள் 10—4—27 மதுரை திருமலைநாயக்கர் மஹாலில் நடந்த சென்னை மாகாண சித்தவைத்தியக் கண்காட்சிசாலையில் ஓலை பேட்டில் 200000 பாட்டுக்களடங்கிய சித்தவைத்திய நூல்களைக் கொண்டு வந்து வைத்தார்.

சென்னைமாகாண சுகாதார அமைச்சர், ஆனரபில், திவான் பகதூர் R. N. ஆரோக்கிய சாமி முதலியாரவர்கள் அந்நூல்களில் பலவற்றைப் படித்துப் பார்த்து மகிழ்ந்து கோனாரவர்கள், நூல்கள் சேகரித்ததைப் பற்றிப் புகழ்ந்து பேசி இப்போது ஏட்டிலும் அச்சிலும் இருக்கும் புத்தகங்களுக்கு ஒரு அட்டவணை தயாரித்து அனுப்ப வேண்டு மென்று கூறி அவர் 40 வருஷகாலமாய்த் தமிழ்ச் சித்த வைத்திய நூல்களைத் தேடி ஆராய்ந்து அச்சிட்டு வெளிப் படுத்தியதற்கு நன்றிபாராட்டிச் சென்னைமாகாண சித்த வைத்திய சங்கத்தாரால், "சித்தர் நூல் ஆராய்ச்சிப் புலவர்,, என்ற பட்டமும், பொற்பூவும் (Gold medal) கொடுக்கப் பெற்றிருக் கின்றனர்.

நமது கோனாரவர்கள் நெடுநாள் முயன்று சில சித்தர் நிகண்டுகளிலும், பழைய ஓலை ஏடுகளிலிருக்கும் வைத்திய அகராதிகளிலு மிருந்து பொருளகராதியில் 12843, சொற்களும் தொகையகராதியில் 3105 சொற்களும்திரட்டித் தமிழ்ச்சித்தவைத்திய அகராதி யென்று பேரிட்டு அச்சிட்ட இந்நூலை நான் பார்வையிட்டேன். அவர் இந்நூலைத்திரட்ட மிக உழைத்து வேலைசெய்திருக்கின்றாரென்பது அவர் திரட்டிய சொற்களின் மிகுதி யானே நன்கு விளங்குகின்றது. இதினும் பெரிய வைத்திய அகராதி இதுவரை

ஒன்றும் வெளிப்படாமையால் இந்தத் தமிழ்ச்சித்தவைத்திய அக ராதி சித்த வைத்தியர்கள் அனைவரும் வாங்கிப் படித்துப் பயன டையத் தக்கதா யிருக்கிறது.

நமது கோனாரவர்கள் ஊக்கமும் ஆர்வமும் உடையாராய் உலகுக்குப் பயன் படும்படி இந்நூலை விரைவில் முடித்ததை நான் பெரிதும் பாராட்டு கின்றேன். ஆனரபில் திவான் பகதூர் R. N, ஆரோக்கிய சாமி முதலியாரவர்கள் உத்தரவளித் தாங்கு இப் போது ஏட்டிலும் அச்சிலும் இருக்கும் புத்தகங் களுக்கும் ஒரு அட்டவணை தயாரித்து அனுப்புவார் என்று நான் நம்புவ தோடு இவர் உண்மை உழைப்புக்குப் பயனாகச் சித்தர் அரு ளும், முக்கட் கடவுளருளும், நீண்ட ஆயுளும், செல்வமும், ஞான மும் பெருக வேண்டு மென்றும் எல்லாம் வல்ல இறைவனடிகளை வணங்கு கின்றேன்.

கோவிற்பட்டி.
15—12—27

இங்ஙனம்.
வி. சிவஞான யோகி,
அமைச்சர்.
சேன்னை மாகாண சித்த வைத்திய சங்கம்.



# சிறப்புரை.

"தமிழ்ச் சித்த வைத்திய அகராதி" எனப் பெயரிய இந் நூல் மதுரைப் பிரபல புத்தக வர்த்தகராகிய திரு. இ. ராம. குருசாமிக் கோனார் அவர்கள் தமது பால்ய காலந்தொடங்கி இது காலம் வரையும் சித்தர் வைத்திய சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்து சுருதியிற் கண்டுள்ள மூலிகைகள் முழுதையும் யுக்தியிற் கொணர்ந்து, பின்னர் அவற்றைத் தமது அநுபவத்திலும் ஆய்ந்து கண்டறிந்து, அவை சுருதியோடு ஒத்துவரும் வரை மீண்டும் மீண்டும் இடைவிடாது முயன்று "பகீரதப் பிரயத்தனமே" யன்ன வைத்தியர்க்கும் மற்றையோர்க்கும் பெரும் பயனளிக்குமாறு யாத்து வெளிப் படுத்திய ஒரு பெரும் நூலாகும்.

இப் பூகோளப் பரப்பில் சிருஷ்டிக்கப் பட்டுள்ள எல்லாவஸ்துக்களையும் அடக்கி யாட்கொண்டு அவற்றினுக் கெல்லாம் மேலாகநின்று நிலவும் மானிடப் பிறவி பெற்ற நமக்கு மிக்க இன்றியமையாமையாதன வாகியவை பாஷைகளே. அவை பலவுள என்றாலும் தனித்தனி அவற்றுள் வைத்தியம், வாதம், மந்திரம், நாடி, சிற்பம், சோதிடம், காவியம், ஞானம் என இன்னோரன்ன பல பாகுபாடுற்று ஆன்ம கோடிகளது சரீரத்தில் பிணிமுதலியன வாராது தடுப்பதும் வந்தனவற்றை இலகுவில் நீக்குவதும் மேற்கூறிய பல பாகு பாடுகளனைத்தினும் முதன்மை யானது பற்றி வைத்தியத்தையே சிரேட்டமெனக் கொண்டு அகஸ்தியர் முதல் புலத்தியர் ஈறாகச் சித்தர்கள் பதினெண்மர் அவதரித்துப் பல ஆயிரக்கணக்கான வைத்திய சாஸ்திரங்க ளியற்றியும், பல ஆயிரக் கணக்கான மாணாக்கருக்கு அவற்றைக் கற்பித்தும் வந்தனரென்றாலும் இற்றைக்குச் சற்றேறக் குறைய பன்னீராயிரத் திருநூறு வருடங்களுக்கு முன் முதற் சங்க காலந் தொட்டு மூன்றாஞ் சங்க காலமுடிவு வரை முறையே அகஸ்தியர், தொல்காப்பியர், நக்கீரர் முதலிய பல செந்நாப் புலவர்கள் இருந்து காவியங்களை ஆதரித்துக் குண்டலகேசி, சிந்தாமணி, சிலப்பதிகாரம், இறையனாரகப் பொருள், மணிமேகலை, வளையாபதி, நாலடி, ஈரடி முதலிய பல காவிய நீதிஞான நூல்களை யாத்து அவற்றினை வலியுறுத்தி வந்தாங்கு "இவ்வைத்திய சாஸ்திரங்களுக்கும் அகஸ்தியர் இலக்கண நூல் இயற்றுதற்கு முன்னரே சிவபெருமான் உபதேசித்தபடி இருபத்தைந்து வைத்திய நூல்கள் இயற்றியுங் கூட"

அத்தகைய சங்கம் நிறுவப்பட்டு அதனை ஆதரித்து வந்தன ரென்று துணிதற்குப் பெரும்பாலும் சரித்திரம் இடந்தரவில்லை. ஏனெனில் இவை கர்ண பரம்பரைச் சந்ததி வழியாகத் தந்தை தன்பிள்ளைக்கும் பிள்ளை தன் பிள்ளைக்குமாகத் தொண்டு தொட்டுத் தொட்டுக் காட்டிக் கையாண்டு வந்ததே காரண மென்ப. ஆனது பற்றியே தமிழிற் காவிய இலக்கியத்திற்குப் பல இலக்கணங்களும் பேரகராதியும் ஏற்பட்டிருப்பது போன்று இவற்றினுக்கும் இரண்டொரு நிகண்டுகளைத் தவிர இலக்கணமோ அல்லது பேரகராதியோ விசேட மாக ஏற்படவில்லை. மேலும் வைத்திய சம்பந்தப் பட்ட சாஸ்திரங்கள் உலகம் தொடங்கிய காலமுதலே தமிழ் மொழியினும் வடமொழியினும் கோடிக் கணக்காக மலிந்து கிடந்து பின்னர் அவை குறைந்து கொண்டே வருவதற்கும் லத்தின், ஜெர்மன்; பிரஞ்சு, ஆங்கில முதலிய அன்னிய பாஷைகளில் இந்த வைத்திய சாஸ்திரங்கள் நவ நவ மாக அதிகரித்துக் கொண்டே வருவதற்கும் நமது தேசமாந்தர்கள் பழய சாஸ்திரங்களைப் பேணாது விட்டு விட்டதும், போகர் அமெரிக்கா முதலிய மேனாட்டுப் பிரயாணஞ் செய்த போழ்து ஆங்காங்கே பல ஆயிரக் கணக்கான மாணவர்களைச் சேகரித்து அவர்களுக்குச் "சென்ற உயிரை மீட்டும்" வழியொன்று தவிர மற்றை அனைத்தையும் கற்பித்து அவர்கள் அவற்றை அங்ஙனமே தமது பாஷைகளில் போற்றிப் பொதிந்து ஆதரித்துப் பயின்று முயன்று வருவதுந் தான் காரண மென்று கூறலாம்.

இனி நமது தமிழ் நாட்டிலோ சித்தர் நூல்களில் கூறியுள்ள பச்சிலை மூலிகைகளினது கோடிக் கணக்கான பெயர்களைக் குறித்து இடையில் இரண் டொரு வைத்தியப் பெரியார்கள் தமக்குத் தெரிந்துள்ள மிகச்சிறியன வாகிய சில பச்சிலைகளினது பெயர்களை மாத்திரம் பொறுக்கி யெடுத்து அதிலும் நிறம் குணம் முதலியவை யின்றி மலையகராதி யென்றும் பதினெண் சித்தர்கள் வைத்தியப் பேரகராதி என்றும் கோத்து வெளியிட் டிருக்கின்றனர். இருந்து மென்ன? அவை மேற்கூறிய காவியப் புலவர்களுக்குத்தமிழ்ப் பேரகராதி உதவி வருவது போன்று வைத்தியப் புலவர்களுக்குப் போதுமான படி உதவி வருகின்றன வென்று துணிதற்கிட மின்று. இனி அகத்தியனார் மாணாக்கர் தொல்காப்பியனாரியற்றிய பேரிலக்கணமாகிய 'தொல்காப்பியம்' என்ற இலக்கண

நூல் முதற் சங்கப் பிற்பகுதியிலும் இடைச் சங்க முழுப்பகுதியிலும் கடைச் சங்க முற்பகுதி பிற்பகுதியிலும் உதவி வந்து பின்னர் அது தற்காலத்துள்ள பெரும்புலவர்களுக்குங் கூடப்பொருள் படுவதற் கரிதாகிக் கடைச்சங்க காலத்திற்குப் பின்னர் இற்றைக் கெழுநூறு வருடங்களுக்குமுன் பவணந்தி முனிவர் இயற்றியருளிய 'நன்னூல், என்னும் இலக்கணப் பொன்னூல் எங்ஙனம் வலியோர்க்கேயன்றி எளியோர்க்கும் பெரும்பய னளித்துத்தொன்னூலாய தொல்காப்பி யத்தையும் அதன் பயிற்சி குன்றத் தன்னுள் அடக்கி நின்று நிலவு கின்றதோ அங்ஙனமே நமது கோனார் அவர்கள் பெரு முயற்சியில் முயன்று யாத்து வெளிப்படுத்தியுள்ள இத்தமிழ்ச் சித்த வைத்திய அகராதியும் வைத்தியருக்கே யன்றி மற்றை மாந்தர்கட்கும், எளிதிற் பெரும் பயனளித்து நமது தேசம் "நோயற்ற வாழ்வாம்" செல்வத்து நிலவுமென்பது எமது துணிபு.

இனி, மீண்டும் பலமூலிகைகளின் நிறம், குணம், முதலியன வற்றோடு இதன் இரண்டாம் பாகமாகக் கோனார் அவர்கள் வெளிப் படுத்தற்கு அவருக்கு நீண்ட ஆயுளும் அவையன்ன ஆக்கமும் பெருகுமாறு யாம் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

நேரிசை யாசிரியப்பா.

தொன்னூலென்ற தொல்காப்பியமே
தன்வளங்குன்றித் தான்பின்னடைய
நன்னூலென்ற நவியமா மொருநூல்
பின்னர்த் தோன்றிப் பிறங்குமாப்போல
பதினெண் சித்தர் பரிபாஷையினுள்
அதினும் பொருள்கொளற் கரும்பாடலினுள்
இதினது குணம்நிறம் இன்னின்னவாமென
மதியாலாய்ந்து மானுடருய்ய
அரும்பெரும் வைத்திய அகராதி யிதனைப்
பெருந்தகை யெங்கள் பேரறிவாளன்
முத்தமிழ்ப் பாங்கும் முழுதறிபுலவன்
புத்தக வர்த்தகப் புனிதமாயாதவன்
இராம குருசாமி யென்னும் பெயரான்
தராதல மிதற்குத் தானளித்தனனால்
சூழ்கடற் புடவி துலங்கு வரையும்
வாழ்க மன்னி வளம்பெற
இசையுஞ் செல்வமும் இனிதுறப் பெற்றே.

மதுரை.
22—12—27

இங்ஙனம்,
நா. கிருஷ்ணசாமி நாயுடு
தமிழ் வித்வான், மதுரை.

மதுரை, யூனியன் கிறிஸ்தவக் கலாசாலைத் தமிழ்த் தலைமையாசிரியரும்
மருத்துவ நூற்கலைஞரு மாகிய

## கனம் அ. மு. ஐ. சாமுவேல்பிள்ளை யவர்கள்

இயற்றிய

# சாத்துக்கவி.

நிலமண்டில ஆசிரியப்பா.

மணிகெழு திரைசூழ் மாநில மாந்தர்
பிணியுறு வாழ்வு பெற்றுய வருளாற்
பானூர் பகர்ந்த பழமறை யெனுமுத்
திறனூ ராயுள் வேதமெய்ப் பொருளைக்
கல்லுணி முனிவன் கான்முளை வகையுளி
முத்தமிழ்ச் சித்தன் முதைக்குமொழிந்த
தொன்னூ லாகிய முன்னூற் றுறையறி
மங்காப் புகழ்மிகு மச்சர் கோரக்கர்
துங்கமார் சித்தியர் துதிமிகு மதங்கர்
ஆதிய ஞதிய சருள்சேர் கடேந்திரர்
கோதில் வருளியர் சாது சதோகர்
தவமிகு சித்தர் நவகண வழிவரு
அந்தமில் கேள்விச் செந்தமிழ்த் தேரன்
முந்திய பதினெண் சித்தரு முனிவரும்
சீரிய வறிவாற் கூறிய பனுவற்
பரிபொருள் யாவுந் தெரிபடக் கருதிப்
பன்னீ ராண்டு பன்னூ லாய்ந்தே
தென்மொழி மருத்துவர் தெளிவுற நாளும்
பொன்னக ராதிப் பொக்கிஷம் வழங்கிய
பன்னல மிகுத்த பண்பன் யாரெனில்
மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவு பாணிற வரிச்சிற
கன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய பொதுவர் மாண்மிகு குலத்திற்
பன்னருஞ் சீர்சா லிராமசாமிக் கோன்
தன்னருந் தவத்தால் தாணியிற் றோன்றிய
குருசாமிக் கோ னெனுங் கோமானே.

மதுரை, பிராட்டிபத்துக் கிராமம் தமிழ்வித்வான்

வீ. நடராஜ பிள்ளையவர்கள்

இயற்றிய

# சாத்துக்கவி.

பூமகளும் நாமகளுஞ் செறிந்து மேவும்
புண்ணியமா மதுரைநகர் பொலிய வாழ்வோன்
மாமகட னருள்பெறுமி ராமசாமி
மன்னியருந் தவத்துதித்த மகிபனாவோன்
தேமருவு முத்தமிழோ டுயர்மா சித்தர்
செப்பியநன் மருத்துவநூ லெல்லாங் கற்றோன்
வாமனிணை யடிமறவாச் சிந்தை யாளன்
வாய்ந்தகுரு சாமியெனும் பெயர்வல்லோனே. (1)

பொதிகைவரை முனிவனொடு மற்று முள்ள
புலமைமிகு சித்தர்கடாம் புகன்ற நூலில்
இதமுறவே மூலிகையி னாமந்தன்னை
எண்ணினுரைத் தாரெனினும் பாரில் வைகும்
சதிர்பெறுமன் சித்தாயுள் மருத்து வர்கள்
சாற்றுபரி நலந்தெரியாத் தன்மையாலே
மதுவருந்து சுரும்பெனவும் மயக்குற்றாராம்
மயக்கமவர் களையுவணம் மனத்தினோர்ந்தே. (2)

பண்டிதர்க்கோ ரருமருந்தா மெனமுயன்று
பரிவுடனம் மூலிகையின் பரிவினாமம்
தெண்டிரைவா ரிதியெனவே வழங்கு நூலில்
தெளிவுறவாய்ந் துணர்ந்தினிது திரட்டி முந்த
மண்டலத்தோர் புகழ்ந்திடநல் மருத்துவர்தம்
மனக்கவலை நீங்கமிக மகிழ்ச்சி யோங்கத்
தண்டமிழ்வைத் தியவகரா தியெனவிந்நூல்
தரணிதனி லச்சியற்றித் தந்தான் மாதோ. (3)

கல்லாருங் கற்றவரு மெளிதி லோர்ந்து
கவின்பெறுமிவ் வகராதி கண்ட காலை
நல்லார்தம் மனத்துறையும் ஞானமூர்த்தி
நன்னூலென் றகமகிழ்ந்து நடித்தானுய்ந்த

தொல்லார்தண் டமிழ்முனியு முடல்குறுகிச்
சுகிர்தகுரு சாமியென்றே வாழ்த்திச் சென்றான்
வில்லார்முண் டகமுறையும் விரிஞ்சன்றேவி
விரும்பியிரு கரமேந்தி வியந்தாள் மாதோ. (4)

எண்ணான்கு தருமநெறி யாவு மேலோர்
ஏற்றமொடு புகன்றார்க ளேகமாகக்
கண்ணாகு மன்னெறியின் முதலா யுள்ள
கலிநோய்தீர்த் துய்யெனுமோர் முறையீதன்றோ
மண்ணாரு மருத்துவர்தம் மயக்க நோயை
மானதமிழ் வைத்யவக ராதியென்னும்
தண்ணாரும் அமிர்தங்கொடு தணித்திட்டானால்
தரணிதனி லிவன்பெருமை சாற்றொணாதே. (5)

மன்னுயிர்கள் நலம்பெறவே யமைந்த செங்கோல்
மாட்சிமைசேர் முறையமைச்சர் மதியின் மிக்கோன்
அன்னையினும் பன்மடங்கா யன்பின் மேவும்
ஆரோக்ய சாமிவள்ளல் அகமகிழ்ந்தே
சென்னைமா காணவைத் தியசங் கத்தில்
சித்தர்நூ லாராய்ச்சிப் புலவரென்றே
நன்னயமா நற்சாட்சிப் பட்டம் சூட்ட
நனிமெடலும் பெற்றனனால் நவிலற்பாற்றே. (6)

---

மதுரை, தமிழ் வித்வான்

ம. அழகர்சாமி பிள்ளை யவர்கள்

இயற்றிய சாத்துக்கவி

வெண்பா

சித்தர் பதினெண்மர் சேர்ந்துரைத்த வைத்தியநூல்
அத்தனையும் தான்தனியே ஆராய்ந்து-மொத்தம்
ஒருநூ லிந்தாவென் றுலகுய்யத் தந்தான்
குருசாமி யாமெங்கள் கோன்.

மதுரை, தமிழ்வித்வான்

## மூ. திருமலைமுத்துப் பிள்ளை யவர்கள்

இயற்றிய

## வெண்பாக்கள்.

---

சித்தர்களின் வாக்கு தெரிந்துந் தெரியாதுஞ்
சித்தந் தியக்கமுளோர் தேர்ச்சியுற—வித்தகமா
யாதிமுத லாராய்ந் தருத்தமிகப் புத்தவக
ராதியொன்று செய்தானன் பால். (1)

ஈரோப் பியர்மற்றோர்க் கேற்றசென்னை சட்டசபை
ஆரோக்ய சாமி யமைச்சரினால்—சீரேற்கத்
தங்க மெடல்பரிசு தந்திடப் பெற்றுவந்தான்
எங்கணுவி யப்புகொள வே. (2)

சித்தர்நூ லாராய்ச்சி செய்புலவ ரென்றபெய
ரைத்தரித்தா னிந்தமது ரைப்பதியில்—வைத்தியமூன்
றுவதும காகாட் டரியகண் காட்சியது
மேவுகு மாத்திரிடை மெய். (3)

அத்தகையோ னென்று லாயர் குலத்துதித்த
உத்தமனெல் லோர்க்கு முபகாரச்—சித்தன்
தருசா மியமாகச் சாற்றுவார் சான்றோர்
குருசாமி யென்னுநங் கோன். (4)

மதுரை, தமிழ் வித்வான்

## த. குப்புசாமி நாயுடவர்கள் இயற்றிய

## சாத்துக்கவி.

எத்திசை யோர்க்குமேற்ற பச்சிலையின்
இயற்பெயர் தெரிந்திருந்தாலும்
தித்திக்கும் தமிழில் தெளிவதாத் தெரியச்
செழிப்புறு மருந்துகள் பேரும்
மொத்தமா யனேக பாஷையி லாய்ந்து
முழுதுங்கற் றெங்குருசாமி
சித்தநூல் வைத்யப் பேரகராதி
திரட்டியச் சியற்றினன் மாதோ.



சென்னை மாகாண சித்த வைத்திய சங்கமெம்பரும்
வைத்தியபூபதி யெனப் பட்டம் பெற்றவருமான
மதுரை, சுவாமி மயில்சுந்தரம் அவர்கள் இயற்றிய

சாத்துக்கவி.

அலைகடலுறிஞ்சுமுனி யருந்தவ மகற்றிமுனை
ஞயக்தமுத் தமிழுங் காணு
தறிவுதடு மாறியிவ் வகிலமெல்லா மோடி
அலைமோதித் தேடித் தேடிப்
புலனறிய மதுரைநகர் புதுமண்ட பத்துற்றுப்
புகல்நூல்க ளாயும் வேளை
புகல்கின்ற நோய்தீர்க்கும் பச்சிலை பல பல
பொருந்துவேர் பல பல வெலாம்
சிலைமொழிக ளாகின்ற சித்துபரி பாஷையும்
தெரிதர விளக்கி யாங்கே
செம்மைபெற வாராய்ந்து தேனினிய செந்தமிழ்
சிறுவர்களு முணரு மாறு
நிலைநின்ற தமிழ்வைத்ய வகராதியைக் கண்டு
நீடுமனமே மகிழ்ந்து
நிரம்புகலைக் குருசாமிக் கோன் புலமைக் குடல்குறுகி
நின்று மலை சென்றன் மாதோ.

---

மதுரை
ஸ்ரீ மதுராம்பிகை தாசன்
மூ. முத்திருளாண்டி பிள்ளையவர்கள்
இயற்றிய

வெண்பா.

---

எத்தனைபேர் வைத்தியநூ லேடா யெழுதிடினும்
அத்தனைக்கு மேலாக யாம்புகல்வோம்—அத்தன்
குருசாமி யாமெங்கள் கோமா னுலகுய்யத்
தருமா வகராதி தான்.



உ

பரமபதி துணை.

# நூலாசிரியரின் கருத்து.

இப்பூவுலகில் படைப்புறப்பெற்ற பல்லுயிர்களும் நலனடையும் பொருட்டுச் சித்தர்கள் பதினெண்மர் அவதரித்து மருந்து பச்சிலை மூலிகைகளின் பெயர்களையும், அவற்றின் குணங்களையும் தாம் தாம் கூறிய சாஸ்திரங்களில் சிற்சிலவிடத்து வெளிப்படையாகவும், சிற்சிலவிடத்துப் பரிபாஷையாகவும் தெரிவித்திருக்கிறார்கள். இங்ஙனம் தெரிவித்துள்ள வைத்திய சாஸ்திரங்களோ கடலலையெனக் கணக்கிட முடியாமலிருப்பதுடன் மூலிகைகளின் பெயர்களைப் பதினெண் பாஷைகளாகிய தமிழ், ஆங்கிலம், தெலுங்கு, இந்துஸ்தான், சமஸ்கிருதம், மராட்டியம், மலையாளம், மலாய், சிங்களம், உருடு, இந்தி, சௌராட்டிரம், ஜெர்மன், ஹிப்ரு, ஒரியா, சீனம், துலுக்கு, கன்னடம், முதலிய பாஷைகளில் விரவிக் கூறியுமுள்ளபடியால் சித்த ஆயுள் வேத வைத்தியர்களும், ஏனையரும் அம்மூலிகைகளின் உண்மைப் பெயர்களை எளிதில் உணர்தற் கியலாது மயங்குதல்பற்றி அப்பெயர்கள் முதலியன தெளிவுறும் பொருட்டு, மூலிகைகளின் பரிபாஷைப் பெயர்களை அவற்றின் உருவம், நிறம், குணம் முதலியவற்றோடு வெளிப்படையாக விவரிப்பது மேற்கூறிய வைத்தியர்களுக்கும், உலகினருக்கும், பெரும் பயனளிக்குமெனவும், உலோகோபகார மாகுமெனவும் கருதி, இத்தமிழ் வைத்திய அகராதியை அரிதின்முயன்று அச்சிடத் துணிந்தேம்.

இம்முயற்சி இனிது முடிவுபெறும் பொருட்டு நாட்டுப் புறங்களிலுள்ள பற்பல பச்சிலை மூலிகைகளையும் ஆராய்ந்து தெரிந்து எழுதவேண்டியதாயிற்று. அவ்வாறு ஆராயுங்கால் அநேக பச்சிலை மூலிகைகள் மலை, வனங்களிலும், கடல்களிலும் இருப்பதாகத் தெரியவந்தது.

யாம் மேற்கூறிய இடங்களுக்குச் சென்று பொருட் செலவையும், கஷ்டப்பாட்டையுங் கவனியாது எமக்குத் தெரிந்தவரை அம்

மூலிகைகளின் உருவம், நிறம், குணம் முதலியவற்றை நன்குணர்ந்தும், பரிசீலனை செய்தும், குறிப்பெழுதியும் வந்து ஷை சித்தர்கள் கூறிய சாஸ்திரங்களின்படி சரிபார்த்தும், அம்மூலிகைகளின் பரிபாஷைகளை யாமறிந்த வரையில் தொகுத்தெழுதியும், இந்தத் தமிழ் வைத்திய அகராதியைத் திரட்டி, மூலிகைகளின் பெயரையும், அவற்றின் தொகையையும் முதல் பாகமாக அச்சிட்டிருக்கிறேம். மூலிகைகளின் குணங்களைப்பற்றிய விஷயங்களோடு இதன் இரண்டாம் பாகம் இனி வெளிவரும்.

இங்ஙனம்,

இ. ரா. ம. குருசாமிக்கோன்.

---

உ

# ரிஜிஸ்டர் அறிவிப்பு.

இதனாற் சகல அச்சுக்கூடத் ததிபர்களுக்கும் புஸ்தக வியாபாரிகளுக்கும், தெரிவிப்பது யாதெனில்:—

பதினெண் சித்தர்கள் திருவாய்மலர்ந்தருளிய சித்த வைத்திய வாத சாஸ்திரங்களில்,மருந்து, பச்சிலை மூலிகைகளின் பரிபாஷைப் பெயர்களை வெளிப் படையாகத் தெரியும் பொருட்டு அநேக ஆண்டுகளாய் நூலாராய்ச்சி செய்து ஷை பரிபாஷைப் பெயர்களை வருக்கமாக எழுதித் தமிழ்ச் சித்தவைத்திய அகராதியெனப் பெயரிட்டு,பெரும் பொருட் செலவு செய்து எம்மால் அச்சிடப்பெற்று கெவர்ன்மெண்டில் சட்டப்படி ரிஜிஸ்டர் செய்திருக்கிறபடியால் பிறர் எவ்விதத்திலும் இதை அச்சிடக் கூடாதென்பதை இதன் மூலமாய்த் தெரிவித்திருக்கிறேம்.

இப்படிக்கு,

இ. ரா. ம. குருசாமிக் கோன்,

புக்ஷாப் புதுமண்டபம், மதுரை.

---

இந்தப் புஸ்தகம் வேண்டுவோர் மேற்கண்ட விலாசத்திற்கெழுதி வி.பி. யில் பெற்றுக்கொள்ளலாம்.



உ

சிவமயம்.

பரமபதி துணை.

மதுரை, திருமலை நாயக்கர் மஹாலில்
1927-ஆண்டில் கூடிய மூன்றாவது

# தமிழ்ச் சித்த வைத்திய மஹாநாட்டில்

நிகழ்ந்தவை.



சென்னை, கனம் மந்திரி ஹானரபில் திவான்பகதூர் R. N. ஆரோக்கியசாமி முதலியார், B.A.B.E.M.L.C. அவர்கள் தலைமையில் நடைபெற்ற தமிழ்ச் சித்த வைத்திய மகாநாட்டுக் கண்காட்சியில் இந்தத் தமிழ் வைத்திய அகராதியைக் கனம், மந்திரி அவர்கள் முன்னிலையிலும், ஷை சங்க அமைச்சர், கோயிற்பட்டி, சுவாமி சிவஞானயோகிகள் முதலான பலபேர்கள் முன்னிலையிலும், மதுரை வைத்திய ஆசிரியர், டாக்டர், ஆர். எஸ். பதி(சித்தா)அவர்கள் வாசித்துக் காட்டியதைக் கேட்ட, கனம் மந்திரியாரவர்களும், சுவாமி சிவஞானயோகி அவர்களும் "இந்த அகராதி வைத்தியர்களுக்கு மிகவும் அவசியமானதென்றும், இதனைச் சீக்கிரம் அச்சிட்டு வெளிப்படுத்தவேண்டு" மென்றும், அவாவினார்கள்.

இதைக் கேட்டிருந்த அடியிற்கண்ட வைத்திய நிபுணர்களும், இன்னும் அநேக சித்த ஆயுள்வேத வைத்தியர்களும் இதனை அச்சிட்டுத்தரும்படி உத்திரவு செய்ததோடு அவையின்கண் சுவாமி, சிவஞானயோகியார்அவர்களே,"இவருக்குயாம் சித்தர்நூல்ஆராய்ச்சிப் புலவர் என்ற பட்டமும் இத்தங்க மெடலும் தந்துளோம்" என்று பாராட்டியபடி அவ்வைத்திய நிபுண அங்கத்தினர்களின் உத்திரவை நிறைவேற்றும் பொருட்டு அன்று தொட்டுப் பெரிதின் முயன்று இந்நூலை அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளோம்.

இதன் அருமை யறிந்த பெரியார் அன்போடிதனை ஆதரிப்பர் என்பதும் எமது துணிபு.

இங்ஙனம்,

இ. ரா. ம. குருசாமிக் கோன்.

## ஷை சங்க அங்கத்தினர்களின் பெயர் விபரம்.

1 மகா-ள-ள-ஸ்ரீ ஆர். எஸ். பதி அவர்கள் வைத்தியபூபதி,
சோல்புரோப்ரைட்டர், ஆர்.எஸ்.பதி அன்கோ, மதுரை

2 ,, எம். சி. முத்துமாகாளியாபிள்ளையவர்கள்
வைத்தியபதி, தங்கமெடல் மேலமாசிவீதி, மதுரை.

3 ,, R. M. K. வேலுசாமிபிள்ளை அவர்கள்
வைத்திய ஆசிரியர், பழனி.

4 ,, S. T. ஆறுமுகதேசிகர் அவர்கள்
நேட்டிவ் டாக்டர், பழனி.

5 ,, C. மலையப்பசாமிபிள்ளை அவர்கள்
வைத்தியபதி, பழனி.

6 ,, T. K. தில்லைச்சாமியவர்கள் தங்கமெடல்
வைத்தியபதி, பிர்மானந்த வைத்தியசாலை, மதுரை.

7 ,, T. S. நாராயணசாமி அய்யரவர்கள்
வைத்தியபதி, காககாதோப்புதெரு, மதுரை.

8 ,, வன்னியக்கோனாரவர்கள்
சித்தவைத்தியர், வடக்குமாசிவீதி, மதுரை.

9 ,, நா. அப்துல்ரஹிமான் சாயபு அவர்கள்
சித்த வைத்தியர், ஆத்தூர்க்கிராமம்,
திண்டுக்கல் தாலுகா.

10 ,, குருசாமிபிள்ளையவர்கள் தஞ்சாவூர் வைத்தியர், மதுரை

11 ,, நாராயணசாமிபிள்ளை அவர்கள்
சித்தவைத்தியர், மதுரை.

12 ,, குமாரவேல்பண்டிதர் அவர்கள்
சித்தவைத்தியர், நாகர்கோவில்.

13 ,, P. சுப்பிரமணியபண்டிதர் அவர்கள்
சித்தவைத்தியர், சுசீந்திரம், கோட்டாறு.

14 ,, M. A. நாராயணசாமி அவர்கள்
வைத்தியபதி, கோட்டாறு.

15 ,, இ. ஈசுவரமூர்த்தி அவர்கள்
வைத்தியபதி, வடிவீசுரம், நாகர்கோவில்.

16 ,, P. சண்முகவைத்தியாவர்கள்
தங்கமெடல், சண்முகானந்த ஔஷதாலயம்,
வடிவீசுரம், கோட்டாறு.

17 மகா-ா-ா-ஸ்ரீ S. M. மூத்துசாமிபண்டிதர் அவர்கள்
கற்பகத்தரு வைத்தியசாலை,
ஓடக்கரை ரஸ்தா, திருநெல்வேலி.

18 ,, S. ஆறுமுகம்பிள்ளை அவர்கள்
சித்தவைத்தியர், தில்லையாடி.

19 ,, சா. சிவசுப்பிரமணியபிள்ளை அவர்கள்
சித்தவைத்தியர், வடிவீசுரம், நாகர்கோவில்.

20 ,, மாதுசாமிபிள்ளை அவர்கள்
வைத்தியபூபதி, கடுவெப்பட்டி சாத்தூர் P.O.

21 ,, வ. கூரத்தாழ்வாரய்யர் அவர்கள்
வைத்தியபதி, சின்னக்காமன்பட்டி.

22 ,, வ. நம்பெருமாளய்யர் அவர்கள்
சித்தவைத்தியர், சின்னக்காமன்பட்டி.

23 ,, R. ரெங்கசாமிநாயுடு அவர்கள்
தர்மவைத்தியசாலை, சித்தவைத்தியர், தூத்துக்குடி.

24 ,, P. G. மூத்துக்கிருஷ்ணநாயுடு அவர்கள்
சித்தவைத்தியர், மேலப்பாவூர்.

25 ,, C. K. ராமச்சந்திரநாயுடு அவர்கள்
சித்தவைத்தியர், ஆலங்குளர் P. O. பரங்கிமலை.

26 ,, பொன்னுவேல்முதலியார் அவர்கள்
சித்தவைத்தியர், சென்னை.

27 ,, சுவாமி, மயில்சுந்தரம் அவர்கள்
வைத்தியபூபதி, மதுரை.

28 ,, டாக்டர் C. M. நடராஜன் அவர்கள்
பார்க்டவுன், சென்னை.

29 ,, மாரிமுத்துசேர்வை அவர்கள் சித்தவைத்தியர்,
மேங்காட்டுப்பொட்டல், மதுரை.

30 ,, C. புருஷோத்தமபிள்ளை அவர்கள்
சித்தவைத்தியர், திருவாரூர்.

31 ,, டாக்டர் N. V. ஸ்ரீராமாச்சார்லு அவர்கள்
வைத்திய ஆசிரியர் ஆயுர்வேடிக் பார்மசி, மதராஸ்.

32 ,, டாக்டர் P. M. சங்கரலிங்கம்பிள்ளை அவர்கள்
சித்தவைத்தியர், கோவில்பட்டி.

33 ,, பரமசிவன்செட்டியார் அவர்கள்
சித்தவைத்தியர், ஸ்ரீவில்லிபுத்தூர்.

34 மகா-ள-ள-ஸ்ரீ R. ஞானப்பிரகாசம் அவர்கள்
சித்தவைத்தியர், தாமரைப்பட்டி, மதுரை.

35 ,, S. அருணாசலம்பிள்ளை அவர்கள்
சித்தவைத்தியர், வடக்குமாசிவீதி, மதுரை.

36 ,, பண்டித வி. மு. முத்துக்குமாரசாமி அவர்கள்
சித்தவைத்தியர், சென்னை.

37 ,, நவரத்ன பார்மஸி கியூரோட், கொச்சி.

38 ,, V. S. அங்கமுத்துப்பிள்ளை அவர்கள்
சித்தவைத்தியர், இராயபுரம், சென்னை.

39 ,, N. கேதாரம்பிள்ளை அவர்கள் வெள்ளி மெடல்
சித்தவைத்தியர், வண்ணாரப்பேட்டை, சென்னை.

40 ,, டாக்டர் மாசிலாமணிமுதலியார் அவர்கள்
சித்தவைத்தியர், சென்னை,

41 ,, G சண்முகானந்தசுவாமி அவர்கள்
தங்கமெடல், சித்தவைத்தியசங்கம்,
யோகானந்தாச்சிரமம், சென்னை.

42 ,, N. சிவகாளத்திபிள்ளை அவர்கள்
சித்தவைத்தியர், 48, நெய்தல்வாயல் கிராமம்,
பொன்னேரி தாலூகா.

43 ,, N. லெட்சுமிதேவிஅம்மாள் அவர்கள்
சித்தவைத்தியம், வண்ணாரப் பேட்டை.

44 ,, N. பொன்னுசாமிபிள்ளை அவர்கள்
சித்தவைத்தியர், நெய்தல் வாயல் கிராமம்,
பொன்னேரி தாலூகா.

45 ,, N. வீரராகவப்பெருமாள்பிள்ளை அவர்கள்
வைத்தியபூபதி, வண்ணாரப் பேட்டை, மதராஸ்.

46 ,, ஜீ. கண்ணுசாமிபிள்ளை அவர்கள்
தங்கமெடல் வைத்தியபதி, முனிசிபல்
தமிழ் வைத்தியசாலை, திருவாரூர்.

47 ,, ஆர். அப்பாத்துரைப்பிள்ளை அவர்கள்
வைத்தியபதி, சித்தவைத்தியர், வேலூர்.

48 ,, கா. வீரபத்திரஞ்செட்டியார் அவர்கள்
சித்தவைத்தியர், சோதிடம், திருமங்கலம்.

49 ,, S. S. சுந்தரம்பிள்ளை அவர்கள்
வைத்தியபதி, கோட்டாறு.

50 ,, அர்ச்சுனன்செட்டியாரவர்கள்
வைத்தியபதி, உத்தமபாளையம்.

51 மகா-௱-௱-ஸ்ரீ டி. கந்தசாமிவைத்தியாவர்கள்
சித்தவைத்தியர், புலியூர்க்குறிச்சி, தென் திருவிதாங்கூர்.
52 ,, சு. இ. தாசன்வைத்தியாவர்கள்
சித்தவைத்தியர், ஊட்டுவாய்மடம், கோட்டாறு.
53 ,, V. தாண்டவேஸ்வரய்ய ரவர்கள்
சித்தவைத்தியர், பெரியகுளம்.
54 ,, M. C. நடேசவைத்திய ரவர்கள் வெள்ளிமெடல்,
சித்தவைத்தியர், கும்பகோணம்.
55 ,, K. S. பொன்னம்பலம்பிள்ளை யவர்கள்
சித்தவைத்தியர், கும்பகோணம்.
56 ,, இந்திய பிராச்சின வைத்தியசமா சங்கம்
கும்பகோணம்.
57 ,, க. வீ. கண்ணையாநாயுடு அவர்கள்
சித்தவைத்தியர், கும்பகோணம்.
58 ,, கோவிந்தபிள்ளையவர்கள்
சித்தவைத்தியர், கும்பகோணம்.
59 ,, கவர்மெண்ட் டாக்டரவர்கள் ஈரோடு.
60 ,, சாமிநாதபிள்ளை யவர்கள்
சித்தவைத்தியர், பாபநாசம், தஞ்சாவூர். (Dt)
61 ,, R. பழனிச்சாமி முதலியாரவர்கள்
சித்தவைத்தியர், கலையம்புத்தூர், பழனி.
62 ,, S. V. அகிலாண்டம்பிள்ளையவர்கள்
சித்தஆயுர்வேத டாக்டர், பழனி.
63 ,, K. சபாபதிபிள்ளையவர்கள்
தமிழ்ச் சித்தவைத்தியசாலை, பழனி.
64 ,, ராமசாமிபிள்ளையவர்கள்
சித்தவைத்தியர், வைத்தியபதி,
வீரநாராயணமங்கலம், திருவாங்கூர்.
65 ,, V. R. வேணுகோபால்நாயுடவர்கள்
சித்தவைத்தியர், வடக்காலத்தூர், நாகப்பட்டணம்.
66 ,, கண்ணுசாமிபண்டிதரவர்கள்
தருமவைத்தியசாலை, சின்னக்கடைத்தெரு, திருச்சி.
67 ,, M. பைரவசுந்தரம்பிள்ளையவர்கள்
ஆயுர்வேத சித்தவைத்தியசாலை, மேலூர்.
68 ,, M. S. சுப்பிரமண்யம் அவர்கள்
சித்தவைத்தியர் ஆறுமுகஆசாரிசந்து, மதுரை.

69 மகா-ா-ா-ஸ்ரீ V. கருப்பபண்டிதரவர்கள்
சித்தவைத்தியர் உடுமலைப்பேட்டை டவுன்,
70 ,, அ. தெக்ஷிணாமூர்த்திபிள்ளையவர்கள்
தமிழ் சித்த ஆயுர்வேத டாக்டர், திருமங்கலம்.
71 ,, T. A ரெங்கநாதநாயுடவர்கள்
சித்தவைத்தியர், திருவழுந்தூர், மாயவரம்.
72 ,, T. M. முருகப்பபிள்ளை அவர்கள்
அஜிஸ்டெண்டு டாக்டர், முனிசிபல்
தமிழ்ச் சித்தடிஸ்பென்சரி, கோயமுத்தூர்.
73 ,, T. G. ராஜரெத்தினம் அவர்கள் சித்தவைத்தியர்
தமிழ்பண்டிட், சின்னக்கடைவீதி, மதுரை.
74 ,, சிகாமணிபண்டிதர் அவர்கள்
வைத்தியபதி, டாக்டர், இன்சார்ஜ்
முனிசிபல் சித்த டிஸ்பென்சரி, கோயமுத்தூர்.
75 ,, T. C. சிங்காரம் வைத்தியபூபதி,
சைனாபஜார்ரோட், திருச்சி.
76 ,, S. M. நாச்சிமுத்துசாமிபிள்ளையவர்கள்
தங்கமெடல் வைத்தியபதி, திண்டுக்கல்.
77 ,, பெ. துரைசாமிநாயுடவர்கள் சித்தவைத்தியர்,
வெள்ளனூர்கிராமம், பூவாளூர் P. O. திருச்சி.
78 ,, தா. கெங்காதரபத்தரவர்கள்
சித்தவைத்தியர், புதுச்சேரி.
79 ,, V. M வருசைமுகம்மதுசாயபு அவர்கள்
யூனானிடாக்டர், இலுப்பூர், திருச்சிஜில்லா.
80 ,, K. S. வெங்கிட்டராமய்யர்அவர்கள்
தமிழ்ச் சித்த வைத்திய டாக்டர், தஞ்சாவூர்.
81 ,, சீதாராம்பிள்ளையவர்கள்
சித்தவைத்தியர், முனிச்சாலை, மதுரை.
82 ,, வெள்ளைச்சாமித் தேவரவர்கள்
சித்தவைத்தியர், முனிச்சாலை, மதுரை.
83 ,, S. முத்துச்சாமிபிள்ளை அவர்கள்
சித்தவைத்தியர், கபிஸ்தலம், பாபநாசம், தஞ்சாவூர். (Dt)
84 ,, T. M. நாராயணசாமிஅய்யர் அவர்கள்
வைத்தியபதி, கோபாலஔஷதசாலை, சீகாழி.
85 ,, எஸ். கே. ராமசாமிஅய்யரவர்கள்
நேட்டிவ் டாக்டர், திருச்சி.
86 ,, சி. முனிசாமி நாயுடவர்கள் சித்தவைத்தியம், மதுரை.

உ

பரமபதி துணை.

பதினெண் சித்தர்கள்
திருவாய்மலர்ந்தருளிய சாஸ்திரங்களில்
மருந்து, பச்சிலை மூலிகையின் பெயர்களைப்
பரிபாஷையாகவும் வெளிப்படையாகவும்
ஆங்காங்குக் கூறியுள்ளதை

மதுரை இ. ராம.
குருசாமிக்கோனார் அவர்களால்
ஒருங்கே திரட்டி எழுதப்பெற்ற

# தமிழ் வைத்திய அகராதி.

## அகவு

அகசம்பங்கி-பெருஞ்சம்பங்கி
அகசமரம்-அகத்திமரம்
அகசுகமரம்-அரசமரம்
அகசேபக்கொடி-கட்டுக்கொடி
அகசைச்செடி-சிறுகல்லூரி
அகச்சூலிமரம்-சிறுசூலிமரம்
அகணிக்காய்-கடுக்காய்
அகண்டம்-மூளை
அகண்டாகரமரம்-செண்பகமரம்
அகதிமரம்-வேலாமரம்
அகதூதிச்செடி-மந்தாரைச்செடி
அகத்திமரம்-வீட்டுத்திமரம்
அகத்தீஸ்வரப்புல்-அறுகம்புல்
அகமமரம்-வெள்வேலாமரம்
அகமாலிகமரம்-கருங்குமிழ் மரம்
அகரம்-சூதம், இரசம்
அகராஜசச்செடி-சிவதைச்செடி
அகருமரம்-அகில்மரம்
அகலிகமரம்-புழுக்கொல்லி மரம்
அகல்மரம்-வெள்ளகில்மரம்
அகவாசிகச்செடி-கருங்குறிஞ்சா
அகவுச்செடி-அமுக்கிராச்செடி

## அக்கணு

அகணுதிதச்செடி-கொடுவேலி
அகாரவுப்பு-கல்லுப்பு
அகிமரால்மரம்-வெள்வேல்மரம்
அகிலமேதகி-செந்தொட்டி
அகில்மரம்-அகருமரம்
அகுசமாதிதம்-குண்டுமிளகாய்
அகுடரோகிணி-கடுகுரோகிணி
அகுடாரிகம்-கருங்குங்கிலியம்
அகும்பைச்செடி-கவிழ்தும்பை
அகுலாதிகச்செடி-கரிப்பான்
அகுலிமரம்-நறுவிலிமரம்
அகுலோதிகம்-கருங்கொடிவேலி
அகுணுதிமரம்-வேப்பமரம்
அகுளைச்செடி-கருஞ்சேம்புசெடி
அகூடகந்தம்-பெருங்காயம்
அகைமமரம்-கருத்தாளிமரம்
அகையுருவி-புல்லுருவி
அகையுலாதிதம்-கருங்காணம்
அக்ககோலம்-தேற்றாமரம்
அக்கணங்காய்-தானிக்காய்
அக்கணம்-பொரிகாரம்
அக்கணுகிகம்-கருங்கற்றாழை

அக்கதேவிக்காய்-சுனைப்புங்கன்
அக்கதேவிமரம்-சுனைப்புங்கு
அக்கந்தமரம்-தான்றிமரம்
அக்கபாரிச்செடி-கருஞ்சடைச்சி
அக்கபிரமரம்-மாமரம்
அக்கப்பாடு-மோசம்
அக்கமுன்றி-கண்
அக்கரச் செடி-வெள்ளெருக்கு
அக்காரகம்-அக்கிராகாரம்
அக்காரப்பட்டை-புளிமா பட்டை
அக்காரமரம்-மாமரம்
அக்கார மோனிக் கொடி - கருங்கோவைக்கொடி
அக்காளப்புல்-தரகப்புல்
அக்கிச்சாறு-கற்றாழைச்சாறு
அக்கிடம்-வசம்பு
அக்கிப்பூடு-கொடிமாப்பூடு
அக்கிராகாரம்-அக்கிராகாரம்
அக்கிராகாரச்செடி - வன்னிக்காரச்செடி
அக்கிலாங்கொடி-கருநாகதாளி
அக்கினு-நெருஞ்சில்கொடி
அக்கினிக்கபம்-கடல்நுரை
அக்கினிச்சிலக்கிழங்கு - கார்த்திகைக்கிழங்கு
அக்கினிச்சிலாசச்செடி - கருங்கொடுவேலிச்செடி
அக்கினிச்சிவச்செடி-குப்பை மேனிச்செடி
அக்கினிச் சிவாகச்செடி - கொடுவேலிச்செடி
அக்கினிச்செடி - செங்கொடிவேலிச்செடி
அக்கினிச்சேவகக்கிழங்கு-கருநாவிக்கிழங்கு
அக்கினித்திராவகம்-அனற்றிராவகம்
அக்கினிமாந்தி-வாதமடக்கி
அக்கினிமுகக் கொட்டை-சேங்கொட்டை
அக்கினிமுலை-சேங்கொட்டை
அக்குமணி-எட்டிக்கொட்டை
அக்குமரம்-எட்டிமரம்
அக்குருமரம்-அகில்மரம்
அக்குரோசக் கொடி - கருஞ்சிங்கிற்கொடி
அக்கோடகக்காய்-கடுக்காய்
அக்கோடகச்செடி - கருஞ்சூரை
அக்கோலமரம்-தேற்றுமரம்
அங்கசங்கம்-சேர்க்கை
அங்கசபிசாகச்செடி-கருநாயுருவிச்செடி
அங்ககூதமரம்-கொன்றைமரம்
அங்கணக்காய்-கடுக்காய்
அங்கயற்கண்ணிச்செடி - கற்பூரவல்லிச்செடி
அங்கரமாதிப்பாஷாணம்-கௌரிபாஷாணம்
அங்கரமோதகிமரம்-சுருநாரத்தைமரம்
அங்கரவல்லிச்செடி - குறிஞ்சாச்செடி
அங்கரூபகம்-மயிர், ரோமம்
அங்கலி-கொங்கை
அங்கன பாஷாணம்-அமிர்த பாஷாணம்
அங்கணி-கற்றாழை
அங்கனை-பெண்
அங்கனைக்கள்ளிச்செடி - ஐங்கணுக்கள்ளிச்செடி
அங்காரம்-தீ, நெருப்பு
அங்காரவல்லி-சிறுதேக்கு
அங்காரவாரிதிச்செடி - கருந்தகரைச்செடி
அங்காரி-வெங்காரம்
அங்காரி கைத்தட்டை-கரும்பு
அங்குசநீறு-பூநீறு
அங்குசநேமிச் செடி-கருந்துத்தி
அங்குசபாதிச்செடி-சிறுபுள்ளடி
அங்குசபிசாரி-கொள்ளு

அங்குசபோசகக் கொடி - கருந்தட்டைப்பயற்றுக்கொடி
அங்குசமரம்-வாழைமரம்
அங்குசமாதிதச்செடி - கருந்துவரைச்செடி
அங்குசம்-காந்தம், பூநீறு
அங்குசயோதனம்-கருந்தினை
அங்குசரோசனி-கூகைநீறு
அங்குசலாவிகம்-கருந்துத்தி
அங்குசவிச்செடி-காணச்செடி
அங்குசைத் தும்பைச்செடி-கருந்தும்பைச்செடி
அங்குசோலி-அறுகு
அங்குடாகினி - கருப்புக் கடுகுரோகணி
அங்குணம்-வெங்காரம்
அங்குரி-விரல்
அங்கை-உள்ளங்கை
அங்கோலமரம்-அழிஞ்சில்மரம்
அங்கோலமாசக மரம்-கரும்புரசு
அங்கோலவைரவ மரம் - அழிஞ்சில்மரம்
அசகஞகமரம்-கருந்துவரை
அசகண்டச்செடி-தைவேளை
அசகாமிகக் கொடி - கருமொச்சைக்கொடி
அசட்டி-அசமதாகம், ஓமம்
அசப்பு-சடுதி, சீக்கிரம
அசமதாகம்-ஓமம்
அசமநாகி-குரோசாணிஓமம்
அசமந்திரமரம்-மலையத்திமரம்
அசமாருதமரம்-அத்திமரம்
அசமேவிகச்செடி-கருப்பம்மான் பச்சரிச்செடி
அசமோதப்-ஓமம்
அசமோதாதிகச்செடி-கருப்பறுகுச்செடி
அசம்-வெள்ளாடு
அசம்பவம்-சூனியம்
அசராதிமரம-கொன்றைமரம்
அசவாஷிகம்-கருப்புக்கசகசா

அசனபன்னி-சித்தகத்திமரம்
அசனபாணிகச்செடி - கருப்புப்பாவட்டைச்செடி
அசனப்பூடு-வெள்ளைப்பூடு
அசனவேதி-சீரகம்
அசனிமரம்-அனிச்சைமரம்
அசஞேபத்தாரை மரம்-கருப்புமந்தாரைமரம்
அசன்றிகாச்செடி - தைவேளைச்செடி
அசாகமரம்-அரசமரம்
அசாணிமூலிக் கொடி-உத்தமதாளிக்கொடி
அசிதகருணிச் செடி-கருப்புவழுதலைச்செடி
அசிதாப்புருகம்-நீலோற்பலப்பூ
அசிபகாந்தச் செடி - கருவிழிச்செடி
அசிபத்திரத்தட்டை-கரும்புத்தட்டை
அசீவம்-மரணம்
அசுணப்பூடு-வெள்ளைப்பூண்டு
அசுதகிமரம்-கருவேம்புமரம்
அசுவகந்தி - அமுக்கிராச்செடி
அசுவக் கிழங்கு-அமுக்கிராக்கிழங்கு
அசுவசட்டிராக்கொடி-நெருஞ்சில்
அசுவசாம்பிரப்பூ-கருப்பு மந்தாரைப்பூ
அசுவச்செடி-அமுக்கிராச்செடி
அசுவத்தமரம்-அரசமரம்
அசுவத்தாதிக்காய்-கருப்புவழுதலங்காய்
அசுவாபரிச்செடி-அரளிச்செடி
அசுவாபாணிதமரம் - கருமருதோன்றிமரம்
அசுவாமணக்குச்செடி-சிறுபூளை
அசூசம்-சூதகம், அசுத்தம்
அசோகமரம்-அசோகுமரம்
அசோகாதிதச்செடி-சிவதுளசி
அசோகுமரம்-கோபிகமரம்

அசோடகத்திமரம்-சிவப்பகத்திமரம், செவ்வகத்திமரம்
அசோணப்பழம்-வாழைப்பழம்
அசோணமரம்-வாழைமரம்
அசோண்டிக்கொடி-குறட்டைக்கொடி
அசோண்டிப் பழம்-குறட்டை
அசோதகிச்செடி-அவுரிச்செடி
அச்சகச்செடி-நீர்முள்ளிச்செடி
அச்சஞ்செடி-குட்டியச்சஞ்செடி
அச்சதாப்பிரியமரம்-கருவாழை
அச்சத்திரிச்செடி-நத்திரிச்செடி
அச்சபரப்புல்-காணற்புல்
அச்சபாணிதச்செடி-சிவப்பம்மான் பச்சரிசிச்செடி
அச்சமப்புல்-முசுறுப்புல்
அச்சமரம்-மாவச்சமரம்
அச்சமாயிதக்கொடி-சிவப்புக் கழற்சிக்கொடி
அச்சம்பபோளச்செடி-சிவப்பு அடுக்கலரிச்செடி
அச்சாணிமரம்-கருவேம்புமரம்
அச்சாணிமூலிக்கொடி-வேலிப் பருத்திகொடி
அச்சினிமாதம்-எட்டாமாதம்
அச்சுரக்கொடி-நெருஞ்சிகொடி
அச்சுரை-உடம்பு, சரீரம்
அச்சுவத்தமரம்-அரசமரம்
அச்சுவாதிதச்செடி-சிவப்புக்காசரளிச்செடி
அஞ்சலிக்கொடி-வரற்சுண்டி
அஞ்சலிப்பாலைச்செடி-ஆடுதின்னாப்பாலைச்செடி
அஞ்சனகுமாரிச்செடி-சிமிட்டிச்செடி
அஞ்சனக்கல்-கருமிபீளை
அஞ்சனத் திரவியம்-ஐங்கோலத்தைலம்
அஞ்சனபாஷாணம்-வான்சோதிபாஷாணம்
அஞ்சனபோளம்-கரியபோளம
அஞ்சனவேர்-அவுரிவேர்
அஞ்சனிப்புல்-காணற்புல்
அஞ்சிகம்-கண், நேத்திரம்
அஞ்சினிமாதம்-ஐந்தாமாதம்
அஞ்சீரமரம்-அத்திமரம்
அஞ்சுருவாணிநீறு-பூநீறு
அஞ்சுருவாணிப்பூட்டு-துருசுச்செம்பு
அஞ்சுருவாணி மருந்து-துருசு
அஞ்சுருவாணிமூலம்-முப்பு
அஞ்சுருவாணியுப்பு-கல்லுப்பு, பூநீருப்பு
அஞ்ஞுகக்கீரை-சிவப்பு அரைக்கீரை
அஞ்செவிக்கொடி-வரட்சுண்டிக்கொடி
அடகம்-வசம்பு, பேர்சொல்லான்
அடங்கரோகிணி-கடுகுரோகிணி
அடங்காவாரிதி-மூத்திரம், அமுரி
அடப்பங்கொடி-அடம்புகொடி
அடப்பதாதிச்செடி-சிவப்புக் கூத்தன்குதம்பைச்செடி
அடப்பிமரம்-கடம்பமரம்
அடப்பிமாநிகச்செடி-சிவப்புக் காசித்தும்பைச்செடி
அடப்பைமரம்-வாதாங்கொட்டைமரம்
அடவிகச்செலவம்-கஸ்தூரி மஞ்சள், அமுதுமஞ்சள்
அடவிகம்மம்-சாம்பல்
அடவிமஞ்சள்-மரமஞ்சள்
அடவிமூர்க்கிச் செடி-சிவப்புக் கிலுகிலுப்பைச்செடி
அடவிமேற் புல்லுருவி-கள்ளிமேற்புல்லுருவி
அடவிமைச்செடி-கருங்கரிப்பான்செடி
அடாசனிச்செடி-புளியாரை
அடித்திகச் செடி-அமுக்கிரா

அடிநீர்-சுத்தகங்கைநீர்
அடிம்புருகவேர்-சிவனைதவேர்
அடுக்கலரிச் செடி - அடுக்கரளிச் செடி
அடுக்கிளநீர்த்தென்னை - ஆயிரங் காட்சித்தென்னை
அடுக்கிறைபுஷ்பம்-வெண் டாமரைப்புஷ்பம்
அடுக்குச் செம்பரத்தை-குங்கும ச்செம்பரத்தைச்செடி
அடுக்குநந்தியாவட்டைச் செடி— அகிலமேதகச்செடி
அடுக்குவாழை-பனைவாழை மரம்
அடுக்கூமத்தைச் செடி-காட் டுமத்தைச்செடி
அடைவிகச்சோலம் - கஸ் தூரி மஞ்சள்
அட்சதை-மங்கலவரிசி
அட்சரப்புல்-பிணசப்புல்
அட்சரப்போளம்-கரியபோளம்
அட்டகணிச்செடி - ஆடா தோடைச்செடி
அட்டகத்தாதிக் கிழங்கு-சிவப்பு ச்சருக்கரைவள்ளிக்கிழங்கு
அட்டகம்-வசம்பு, பேர்சொலலாதது
அட்டகாசிச் செடி-சிறு சிமிட் டிச்செடி
அட்டகிராஞ்சினி-மணற்சினி
அட்டக்காய்-சாதிக்காய்
அட்டதாதிக மரம்-சிறு கொன் றைமரம்
அட்டதிசைச் செடி-எருக்கிலைச் செடி
அட்டதிரசம்-அரபொடி
அட்டப்பிரமிச்செடி-பெரும் பிர மிச்செடி
அட்டமுகடு-உச்சி
அட்டி-அதிமதுரம்
அட்டிகக்காய்-சாதிக்காய்
அட்டிதாமதம்-சிறுசீரகம்
அட்டிமதுரம்-அதிமதுரம்
அட்டிரமரம்-இலுப்பைமரம்
அட்டிமைச்சீரகம்-கருஞ்சீரகம்
அட்டிரபாணிதம்-சிவப்புப் புளி யம்பிரண்டைக்கொடி
அட்டினம்-சீரகம்
அட்டுப்பு-காய்ச்சியவுப்பு
அணிச்சுரச்செடி-நாகமல்லிகை
அணிச்சுராவிதச் செடி-சிவப்புக் கிழ்காய் நெல்லிச்செடி
அணிஞ்சகச்செடி-கொடிவேலி
அணிஞ்சேபக் கொடி - சிவப்புக் குமிட்டிக்கொடி
அணிநுணுமரம்-மஞ்சணத்தி
அணிநோகிமரம்-சிவப்புக் கொ ன்னைமரம்
அணிமூலைக்காய்-பூசணிக்காய்
அணிமூலைப்பால்-பூசணிக் காம் பின்நீர்
அணுக்கமரம்-சந்தனமரம்
அணுக்காபிதமரம்-சிவப்புச் சந் தனமரம்
அண்டமேனிச் செடி - குப்பை மேனிச்செடி
அண்டகெவுணச் செடி-காட்டுப் பருத்திச்செடி
அண்டக்கோசு-முட்டைக்கோசு
அண்டசம்-முட்டை
அண்டசவ்வு-முடிமாமிசம்
அண்டச்சிறுநீர்-மூத்திரம்
அண்டமுகடு-உச்சிமத்தி
அண்டம்-கோழிமுட்டை
அண்டரசம்-மூளைரசம், முட்டை யின் கரு
அதகக்கொடி-பெருமருந்து
அதபாமிர்தக் கொடி - சிவப்புச் சருக்கரைவள்ளிக்கொடி
அதமரம்-அத்திமரம்
அதம்பம்-கற்பரிபாஷாணம்

அதர்-மருந்துக்கசடு
அதவுநெய்-அத்திப்பிசின்
அதவுமரம்-அத்திமரம்
அதளப்பிச்சிச் செடி - சிவப்புச் சீமைப்பிச்சிச்செடி
அதளமூலிக்கொடி-ஆடு தின்னாப் பாளைக்கொடி
அதளமேலிச்சாரணை - சிவப்புச் சத்திசாரணைக்கொடி
அதளைக் கொடி - விதுகங்காய்க் கொடி
அதாகசச்செடி-சிவப்புச் சிவதை
அதாசலக் கொடி - காட்டு மல்லிகைக்கொடி
அதிகண்ணிச்செடி-மூன்றுடரி
அதிகத்திக்கொடி - குருக்கத்திக் கொடி
அதிகங்கைச் செடி - சிறியாநங்கைச்செடி
அதிகாலச்செடி-கொடி வேலி
அதிகாலினிக் கொடி-சிவப்புத் தட்டைப்பயிற்றுக்கொடி
அதிகாவிச் செடி-வெண் நாவி
அதிகேமிச்செடி-சிவப்புச் செவ்வந்திச்செடி
அதிகமாலிக் கொடி-குருக்கத்திக் கொடி
அதிகமேனிச்செடி-சிவப்புக் குப்பைமேனிச்செடி
அதிகரக்கொடி-காட்டு மல்லிகைக்கொடி
அதிகராவிகச்செடி- சி வ ப் பு த் துளசிச்செடி
அதிகற்றுதிச்செடி-கொடிவேலி
அதிகாயசித்திமரம்-கருமருது
அதிகும்பைச் செடி - கையான் தகரைச்செடி
அதிகேரளச்செடி-சீதாசெங்கழுநீர்ச்செடி
அதிகோலமரம்-அழிஞ்சில்மரம்
அதிகோவிகச்செடி- சி வ ப் பு ச் செங்கொட்டிச்செடி
அதிங்கம் - அதிமதுரம், குன்றிமணிவேர்
அதிங்காலிகக் கொடி - சிவப்புப் புளியம்பிரண்டைக்கொடி
அதிங்குச்செடி-மண்ணை கட்டிச் செடி
அதிசாதிதச்செடி-சிவப்புத் துளசிச்செடி
அதிசாரணமரம்-மாவுலிங்க மரம்
அதிசாரமூரிக்கொடி - ஊ ஞ் ங் கொடி
அதிசௌரப மரம்-இனிப்பு மாமரம்
அதிச்சக்கர காளிச்செடி-சிவப்பு மணத்தக்காளிச்செடி
அதிச்சத்திரகப்பூடு-காளான்
அதிதாகம்நீக்கி-அதிமதுரம்
அதிதாரகமரம்- இலந்தைமரம்
அதிதிபூசிதமூலி-சத்திச் சாரணைக்கொடி
அதிபசமிமரம்-கொன்றைமரம்
அதிபதாதிக்கொடி-சிவப்புப் பசளைக்கொடி
அதிபதிங்கிச்செடி-கொடுவேலிச் செடி
அதிபதிச்சங்கரிசி - வாலுளுவை யரிசி
அதிபதிமரம்-செண்பகமரம்
அதிபதுங்கைச் செடி - கொடி வேலிச்செடி
அதிபமரம்-வேப்பமரம்
அதிபலம்-கண்டதிப்பிலி
அதிபலைச்செடி-பேராமுட்டி செடி
அதிமதுரம்-குன்றிமணிவேர்
அதிமலமரம்-மாவுலிங்கமரம்
அதிமாலகமரம்-நெட்டிலிங்கம்
அதிமுத்தக்கொடி-குருக் கத்திக் கொடி

அதிமூத்திரம் நீக்கிச்செடி-சிவப்புப்பொன்னாங்கண்ணிச்செடி
அதியாமப்புல்-முயற்புல்
அதியோமகச்செடி - சிவப்பு வாடாமல்லிகைச்செடி
அதிராம்பைச் செடி-பொற்றலைக்கையான்செடி
அதிவாவிகமரம்-சிவப்பு மருதோன்றிமரம்
அதிவிடம்-அதிவிடையம்
அதிவிடாகிகச்செடி-சிவப்பு ரோஜாச்செடி
அதும்பைச் செடி-கௌதும்பை
அதோதீதச்செடி-சிவப்புமுள்ளிக்கீரைச்செடி
அத்தகம்-கருஞ்சீரகம்
அத்தகாச்செடி-ஆமணக்கு முத்துச் செடி
அத்தகாண்டகச் சோளம்-முத்துச்சோளம்
அத்தகாதிதம்-அதிவிடையம்
அத்தகிகக்கொடி-சிவப்பு மூக்கரைச்சாரணைக்கொடி
அத்தகைச்சாரணை-சிவப்பு வட்டச்சாரணை
அத்தகோலமரம்-நெல்லிமரம்
அத்தம்-தங்கம்,பொன்
அத்தர்-சந்தனஅத்தர்
அத்தான் கொடி-முடக்கத்தான் [கொடி
அஸ்தி-எலும்பு
அத்திகடியம்-திப்பிலி
அத்திகண்ணிச்செடி - கரிசிலாங்கண்ணிச்செடி
அத்திகேசரக்கொடி-சிவப்பு வல்லிக்கொடி
அத்திகோலமரம்-அழிஞ்சில்
அத்திகோவிகக்கீரை-சிவப்பெலிச்செவிக்கீரை
அத்திக்காளிக் கீரை-மோளிக்குழம்பான்கீரை

அத்திக்காற்சுவடி-யானைக் காற்பூடு
அத்திக்குட்டி மலம் - கண்டில் வெண்ணெய்
அத்திக்கொடி-குருக்கத்தி
அத்திக்கொம்ப னதிவிடையம்-யானைக்கொம்ப னதிவிடையம்
அத்திக்கோவிகச் செடி-சிறுகுறிஞ்சாச்செடி
அத்திசச்செடி-நீர்முள்ளிச்செடி
அத்திசாக்கொடி-கொடிமுந்திரி
அத்தித்திப்பிலி-யானைத் திப்பிலி
அத்தித்தேக்கிச்செடி-சிறுகொத்தவரைச்செடி
அத்திபுரசாதனிச் செடி-அவுரிச்செடி
அத்திபைரவி மரம்-சீமை விளாமரம்
அத்திமரம்-காட்டத்திமரம்
அத்திமானச் செடி-ஆமணக்கு
அத்திமேற் புல்லுருவி - குஞ்சாமேற் புல்லுருவி
அத்திரம்-குக்கில்
அத்திராமரம்-அரசுமரம்
அத்திரிகாச்செடி-சிறு சிமிட்டி
அத்திருமரம்-வேந்தன்மரம்
அத்துகச்செடி-ஆமணக்கு
அத்துகமாணிமரம்-மன்னன்மரம்
அத்துகமேதிச் செடி-சிறு சிலும்பான்செடி
அத்துகாமணக்குச் செடி - ஆமணக்குச்செடி
அத்துகோசகம்-சிறுசீரகம்
அத்துசம்-மரமஞ்சள்
அத்துமணிமரம்-அரசமரம்
அத்துமம்-அரத்தை
அத்துமாகசச்செடி - சிறு செந்தொட்டிச்செடி
அத்துலாச்சீரகம்-கருஞ்சீரகம்

அத்துலிக்கொடி-சிறு தெல்லுக்கொடி
அத்துவர்க்கயம்-மைச்சிரகம்
அநங்கலிச்செடி-சிறு தேட்கொடுக்குச்செடி
அநங்கன்பூ-இருவாட்சிப்பூ
அநுகூதைமரம்-புளியமரம்
அந்தகச்செடி-ஆமணக்குச்செடி
அந்தகாரமரம்-நெல்லிமரம்
அந்தகோரமரம்-நெல்லிமரம்
அந்தசடம்-வயிறு
அந்தரத்தாமரை-குளிர்தாமரை
அந்தரத்தேசரிக் கொடி-சிறுபசளைக்கொடி
அந்தரவல்லிக்கிழங்கு - கருடன் கிழங்கு
அந்தரவறுணிக்கொடி-சிறு நெருஞ்சிற்கொடி
அந்தரவனசப்பாசி-கொடிப்பாசி
அந்தாரப்பனை-தொட்டிப் பனை, சிறுபனை
அந்திப்பீழைச்செடி-சிறு பீழை
அந்திப்பூச்செடி-அந்திமல்லிகைப்பூச்செடி
அந்திமந்தாரைச்செடி-அந்திமல்லிகைச்செடி
அந்திமரித்தான்கொடி-சிறுபேய்க்குமிட்டிக்கொடி
அந்திமலர்ந்தான் செடி-அந்திப்பூச்செடி
அந்திமலாகிகச் செடி-அந்தி மந்தாரைச்செடி
அந்திமல்லிகைச் செடி-அந்தி மந்தாரைச்செடி
அந்திரலோகிதக்கொடி-சிறுபொடுதலைக்கொடி
அந்திவிருட்சம்-தில்லைவிருட்சம்
அந்திவீருகச்செடி-சிறுமுள்ளங்கிச்செடி
அந்தேசாலகமரம்-தேற்றுமரம்

அந்தேசோலிகப்பூண்டு-சிறு வெழுக்காணிப்பூடு
அந்தோர்மரம்-நெல்லிமரம்
அபசகச்செடி-சிற்றிலந்தை
அபந்தலைப்பட்டை - செங்கத்தாரிப்பட்டை
அபமார்க்கச்செடி-நாயுருவி
அபாமார்க்கச்செடி-நாயுருவி
அபானநீர்-குடந்நீர்
அபானியக்காய்-கடுக்காய்
அபிரங்கிமரம்-கருநெல்லிமரம்
அபிற்சாந்துப் பட்டை-பூஞ்சாந்துப்பட்டை
அபிற்சிரமரம்-சிற்றீஞ்சுமரம்
அபின்-அபினி
அப்பகச்செடி-வட்டத்திருப்பி
அப்பகாசச் சேம்புச்செடி-சீமைச்சேம்புச்செடி
அப்ரப்பட்டை-ஆவரம்பட்டை
அப்பளாகாரம்-சவுக்காரம்
அப்பாகவரிசி-வாலுளுவையரிசி
அப்பிரகநீர்-அவுரிநீர்
அப்பிரகம்-வியோசத்திபாஷா
அப்பிரியமரம்-ஓதியமரம் [ணம்
அப்பிருதிப்பழம்-பேரீச்சம்பழ
அப்பிரகமரம்-புளிப்புமாமரம்[ம்
அப்பிராப்பழம்-சீமையத்திப்
அப்பு-தண்ணீர் [பழம்
அப்புக்கிரட்டிக்கொடி-கட்டுக்
அப்புநீறு-கடலுப்பு [கொடி
அப்புப்பு-கஞ்சியுப்பு
அப்புராமரம்-பாதிரிமரம்
அப்புலோகிதம்-சீமையிலந்தை
அப்புளண்டம்-தகரைச்செடி
அப்புளாகாசக் கொடி-வேரில்லாக்கொத்தான்கொடி
அப்பைபக்கோவை-கற்கோவை
அப்பைச்சேவகச் செடி-சீமையாமணக்குச்செடி
அப்பைமரம்-கொன்றைமரம்

அப்பைமாரிகச் செடி-செங்கத்திரிச்செடி
அப்ரேகபாஷாணம்-வியோசத்திபாஷாணம்
அமண்டலச்செடி-ஆமணக்கு
அமண்டலாதிமரம்-செங்கடம்பு
அமந்தலப் பட்டை-செங்கத்தாரிப்பட்டை
அமந்தாசிகப் பட்டை - கருளுப்பட்டை
அமராஞ்சனமரம்-சந்தனமரம்
அமரிதக்காய்-கடுக்காய்
அமரிதாவிகச்செடி-செங்கரிப்பான்செடி
அமரிப்புல்-பேய்ப்புல்
அமரிப்பூகச்செடி-செங்கரந்தை
அமரியமரம்-குருந்துமரம்
அமரியுப்பு-சிறுநீருப்பு
அமலகமரம்-அரிநெல்லிமரம்
அமலக்காய்-அரிநெல்லிக்காய்
அமலமஞ்சள்-மரமஞ்சள்
அமலை-சோறு, அரிசிச்சோறு
அமலைக்காய்-கடுக்காய்
அமலைதாரம்-அரிதாரம்
அமளைப்பூண்டு-அரிப்பூண்டு
அமளோகிதத்தண்டு-செங்கீரைத்தண்டு
அமனிதச்செடி-புளியாரை
அமாமிக்கடம்பு-செங்கடம்பு
அமிரம்-மிளகு
அமிராகிதமரம்-செங்கருங்காலி
அமிர்தக்கொடி-சீந்திற்கொடி
அமிர்தசாமரம்-செஞ்சித்தகத்தி
அமுக்கிராச்செடி-அசுவகந்தி
அமுங்காக்கொடி-நெட்டிகொடி
அமுசகக்கொடி-செருப்படை
அமுதகரந்தை-சிவகரந்தை
அமுதக்காய்-கடுக்காய்
அமுதக்குலிகம்-செங்கற்றாழை
அமுதக்கொடி-சீந்திற்கொடி
அமுதக்கோணிகச் செடி-செங்கிழுவைச்செடி
அமுதங்கச்செடி-சதுரக்கள்ளி
அமுதசர்க்கரை-சீந்திற்சர்க்கரை
அமுதசாரமரம்-வெள்வேலா
அமுதசாரம்-தேன், கற்கண்டு
அமுதச்சேவிகம்-சிறுகுறிஞ்சா
அமுதச்சோகிதம்-செங்குமிழ்
அமுதசுரம்-மஞ்சிட்டிவேர்
அமுதநீர்-பிண்டநீர், சூதகநீர்
அமுதமரம்-நெல்லிமரம்
அமுதவல்லிக்கொடி-சீந்திற்கொடி
அமுதவிந்து-வாலைரசம்
அமுதாரிக்கொடி-பூனைக்காலி
அமுதுரைமரம்-எலுமிச்சை
அமுத்தமரம்-நெல்லிமரம்
அமுரிநீர்-சிறுநீர்
அமுர்தபலக்கொடி-பேய்ப்புடல்
அமேதகம்நீக்கி-கற்றாழை
அமேத்தியமரம்-மூங்கில்மரம்
அமைச்சாகிதச்செடி-செங்குருந்தொட்டிச்செடி
அமைமரம்-கூந்தற்கமுகுமரம்
அமைமோனிச்செடி-செங்கொடுவேலிச்செடி
அமையப்புல்-இலாமிச்சைப்புல்
அமோகினிமரம்-பாதிரிமரம்
அம்பகக்கிழங்கு-சேம்புகிழங்கு
அம்பகாதிதம்-செங்கொட்டரன்
அம்பகிப்பாளை-ஆடுதின்னாப் பாளைச்செடி
அம்பங்கியரிசி-விழாவரிசி
அம்பணமரம்-வாழைமரம்
அம்பரநேமிச்செடி - வெண்கிலுகிலுப்பைச்செடி
அம்பரை-நிமிளை
அம்பரைநாதம்-அப்பிரகம்
அம்பர்-சீமையம்பர்
அம்பலக்காணி-செங்கொய்யா
அம்பலக்காச்சி-வாதாக்காச்சி

அத்துலிக்கொடி-சிறு தெல்லுக் கொடி
அத்துவர்க்கயம்-மைச்சிரகம்
அநங்கலிச்செடி-சிறு தேட்கொடுக்குச்செடி
அநங்கன்பூ-இருவாட்சிப்பூ
அநுகூதைமரம்-புளியமரம்
அந்தகச்செடி-ஆமணக்குச்செடி
அந்தகாரமரம்-நெல்லிமரம்
அந்தகோரமரம்-நெல்லிமரம்
அந்தசடம்-வயிறு
அந்தரத்தாமரை-குளிர்தாமரை
அந்தரத்தேசரிக் கொடி-சிறுபசளைக்கொடி
அந்தரவல்லிக்கிழங்கு - கருடன் கிழங்கு
அந்தரவறுணிக்கொடி-சிறு நெருஞ்சிற்கொடி
அந்தரவனசப்பாசி-கொடிப்பாசி
அந்தாரப்பனை-தொட்டிப் பனை, சிறுபனை
அந்திப்பீழைச்செடி-சிறு பீழை
அந்திப்பூச்செடி-அந்திமல்லிகைப்பூச்செடி
அந்திமந்தாரைச்செடி-அந்திமல்லிகைச்செடி
அந்திமரித்தான்கொடி-சிறுபேய்க்குமிட்டிக்கொடி
அந்திமலர்ந்தான் செடி-அந்திப்பூச்செடி
அந்திமலாகிகச் செடி-அந்தி மந்தாரைச்செடி
அந்திமல்லிகைச்செடி-அந்தி மந்தாரைச்செடி
அந்திரலோகிதக்கொடி-சிறுபொடுதலைக்கொடி
அந்திவிருட்சம்-தில்லைவிருட்சம்
அந்திவீருகச்செடி-சிறுமுள்ளங்கிச்செடி
அந்தேசாலகமரம்-தேற்றுமரம்
அந்தேசோலிகப்பூண்டு-சிறு வெழுக்காணிப்பூடு
அஃதார்மரம்-நெல்லிமரம்
அபசகச்செடி-சிற்றிலந்தை
அபந்தலப்பட்டை - செங்கத்தாரிப்பட்டை
அபமார்க்கச்செடி-நாயுருவி
அபாமார்க்கச்செடி-நாயுருவி
அபானநீர்-குடத்துநீர்
அபானியக்காய்-கடுக்காய்
அபிரங்கிமரம்-கருநெல்லிமரம்
அபிற்சாந்துப் பட்டை-பூஞ்சாந்துப்பட்டை
அபிற்சிரமரம்-சிற்றீஞ்சுமரம்
அபின்-அபினி
அப்பகச்செடி-வட்டத்திருப்பி
அப்பகாசச் சேம்புச்செடி-சீமைச்சேம்புச்செடி
அப்ரப்பட்டை-ஆவாரம்பட்டை
அப்பளாகாரம்-சவுக்காரம்
அப்பாகவரிசி-வாலுளுவையரிசி
அப்பிரகநீர்-அவுரிநீர்
அப்பிரகம்-வியோசத்திபாஷா
அப்பிரியமரம்-ஒதியமரம் [ணம்
அப்பிருதிப்பழம்-பேரீச்சம்பழ
அப்பிரகமரம்-புளிப்புமாமரம் [ம்
அப்பிராப்பழம்-சீமையத்திப் [பழம்
அப்பு-தண்ணீர்
அப்புக்கிரட்டிக்கொடி-கட்டுக் [கொடி
அப்புநீறு-கடலுப்பு
அப்புப்பு-கஞ்சியுப்பு
அப்புராமரம்-பாதிரிமரம்
அப்புலோகிதம்-சீமையிலந்தை
அப்புளண்டம்-தகரைச்செடி
அப்புளாகாசக் கொடி-வேரில்லாக்கொத்தான் கொடி
அப்பைக்கோவை-கற்கோவை
அப்பைச்சேவகச் செடி-சீமையாமணக்குச்செடி
அப்பைமரம்-கொன்றைமரம்

அப்பைமாரிகச்செடி-செங்கத்திரிச்செடி
அப்ரேகபாஷாணம்-வியோசத்திபாஷாணம்
அமண்டலச்செடி-ஆமணக்கு
அமண்டலாதிமரம்-செங்கடம்பு
அமந்தலப் பட்டை-செங்கத்தாரிப்பட்டை
அமந்தாசிகப் பட்டை - சுருளுப்பட்டை
அமராஞ்சனமரம்-சந்தனமரம்
அமரிதக்காய்-கடுக்காய்
அமரிதாவிகச்செடி-செங்கரிப்பான்செடி
அமரிப்புல்-பேய்ப்புல்
அமரிப்பூகச்செடி-செங்கரந்தை
அமரியமரம்-குருந்துமரம்
அமரியுப்பு-சிறுநீருப்பு
அமலகமரம்-அரிநெல்லிமரம்
அமலக்காய்-அரிநெல்லிக்காய்
அமலமஞ்சள்-மரமஞ்சள்
அமலை-சோறு,அரிசிச்சோறு
அமலைக்காய்-கடுக்காய்
அமலைதாரம்-அரிதாரம்
அமளைப்பூண்டு-அரிப்பூண்டு
அமளோகிதத்தண்டு-செங்கீரைத்தண்டு
அமனிதச்செடி-புளியாரை
அமாமிக்கடம்பு-செங்கடம்பு
அமிரம்-மிளகு
அமிராகிதமரம்-செங்கருங்காலி
அமிர்தக்கொடி-சீந்திற்கொடி
அமிர்தசாமரம்-செஞ்சித்தகத்தி
அமுக்கிராச்செடி-அசுவகந்தி
அமுங்காக்கொடி-நெட்டிகொடி
அமுசகக்கொடி-செருப்படை
அமுதகரந்தை-சிவகரந்தை
அமுதக்காய்-கடுக்காய்
அமுதக்குலிகம்-செங்கற்றாழை
அமுதக்கொடி-சீந்திற்கொடி
அமுதக்கோணிகச்செடி-செங்கிழுவைச்செடி
அமுதங்கச்செடி-சதுரக்கள்ளி
அமுதசர்க்கரை-சீந்திற்சர்க்கரை
அமுதசாரமரம்-வெள்வேலா
அமுதசாரம்-தேன், கற்கண்டு
அமுதச்சேவிதம்-சிறுகுறிஞ்சா
அமுதச்சோகிதம்-செங்குமிழ்
அமுதசுரம்-மஞ்சிட்டிவேர்
அமுதநீர்-பிண்டநீர்,சூதகநீர்
அமுதமரம்-நெல்லிமரம்
அமுதவல்லிக்கொடி-சீந்திற்கொடி
அமுதவிந்து-வாலைரசம்
அமுதாரிக்கொடி-பூனைக்காலி
அமுதுரைமரம்-எலுமிச்சை
அமுத்தமரம்-நெல்லிமரம்
அமுரிநீர்-சிறுநீர்
அமூர்தபலக்கொடி-பேய்ப்புடல்
அமேதகம்நீக்கி-கற்றாழை
அமேத்தியமரம்-மூங்கில்மரம்
அமைச்சாகிதச்செடி-செங்குருந்தொட்டிச்செடி
அமைமரம்-கூந்தற்கமுகுமரம்
அமைமோனிச்செடி-செங்கொடுவேலிச்செடி
அமையப்புல்-இலாமிச்சைப்புல்
அமோகினிமரம்-பாதிரிமரம்
அம்பகக்கிழங்கு-சேம்பு கிழங்கு
அம்பகாதிதம்-செங்கொட்டான்
அம்பகிப்பாலை-ஆடுதின்னாப் பாலைச்செடி
அம்பங்கியரிசி-விழாவரிசி
அம்பணமரம்-வாழைமரம்
அம்பாநேமிச்செடி - வெண்கிலுகிலுப்பைச்செடி
அம்பரை-கிகிலை
அம்பரைநாதம்-அப்பிரகம்
அம்பர்-சீமையம்பர்
அம்பலக்காணி-செங்கொய்யா
அம்பலக்காச்சி-வாதரக்காச்சி

அம்பலக்கோடகம்-கோடகசாலை
அம்பலத்திமரம்-தான்றிமரம்
அம்பலத்தோதிகச்செடி - செஞ்சதுரக்கள்ளி
அம்பலவிருட்சம்-தில்லைமரம்
அம்பலவேகிச் செடி-செஞ்சூரன்
அம்பளங்காய்-சீனத்துக்காய்
அம்பளாகைமரம்-அகத்திமரம்
அமபிபம்-கள்ளு
அம்புசம்-தாமரை
அம்புசம்மாகிகம்-செடிக்காசரைக்கீரை
அம்புசன்மக்கொடி-தாமரை
அம்புசாகிதச்செடி - செடித்தம்பட்டையவரை
அம்புசாதக்கொடி-கட்டுக்கொடி
அம்புசேதிகச்செடி-செங்கொழுஞ்சிச்செடி
அம்புதப்புல்-கோரைப்புல்
அம்புநீர்-விந்துநீர்
அம்புப்பிரசாதனம்-தேற்றாங்கொட்டை
அம்புப்பிரசிகச் செடி-செங்கொள்ளுச்செடி
அம்புயக்கொடி-தாமரைக்கொடி
அம்புலிச்செடி-சந்திரகாந்தி
அம்புவாகினிமரம்-எலுமிச்சை
அம்புவியாசு-செடிப்பூவரசு
அம்பைவேர்-வெட்டிவேர்
அம்பொருந்தகரை-செந்தகரை
அம்போருகக்கொடி-தாமரை
அம்மச்சிமரம்-செந்தணக்குமரம்
அம்புட்டிக் கிழங்கு - கொட்டிக்கிழங்கு
அம்மாதிகச்செடி-செந்திரா
அம்மான்பச்சரிசிச்செடி - சித்திரப்பாலாடை
அம்மியபாவைச் செடி-செந்தாடுபாவைச்செடி
அம்மிரமரம்-மாமரம்
அம்மிராமரம்-செந்தாமரைமரம்
அம்மிலவிருட்சம்-புளியமரம்
அம்மையார்கூந்தல்-சவுரி கொடி
அம்மைவேணிச்செடி-வெண் தகரைச்செடி
அம்மோனியாகப்பிசின் - சீமைப்பிசின்
அயகத்தினை-செந்தினை
அயகம்-வசம்பு
அயக்காந்தமரம்-வெண் தேவதாரிமரம்
அயக்காந்தம்-ஊசிக்காந்தம்
அயக்கிராமரம்-கானல்மாமரம்
அயதிப்பாலை-திருநாமப்பாலை
அயத்திராச்செடி-செந்தூருக்கன்செடி
அயத்திற்குத்தாய்-கெந்தகம்
அயத்தீ-இரும்புத் தொட்டிப்பாஷாணம்
அயமரம்-செண்டாளிமரம்
அயமவாதி-வசம்பு
அயமி-வெண்கடுகு
அயமிராச்செடி-செந்தும்பை
அயம்-இரும்பு
அயம்மியச்செடி-செந்துவரை
அயலி-வெண்கடுகு
அயவாரிக் கொடி-செந்நாகதாளிக்கொடி
அயவாரிதி-வசம்பு
அயவாருகச்செடி-செந்நாயுருவி
அயவிகம்-சிற்றரத்தை
அயவிகாரச்செடி-செப்புநெருஞ்சிற்கொடி
அயிகாச்செடி-ஊமத்தைச் செடி
அயிஞ்சிக் கிழங்கு - நிலப்பனைக்கிழங்கு
அயிரகச்செடி-கருவூமத்தை
அயிரியக்கொடி-கெட்டிக்கொடி
அயிலாலிமரம்-செந்நாரைமரம்
அயிலிடம்-சிற்றரத்தை

மேகவண்டமரம் - மயிற்குருந்து மரம்
மேகவரணைச்செடி-அவுரிச்செடி
மேகவருணணைச்செடி - மேகநாத மூலி
மேகவர்ணச்செவ்வந்தி-நீலவர்ண ச்செவ்வந்திச்செடி
மேகவிருளி-பித்து
மேசம்-வெள்ளாடு
மேடகச்செடி - ஆட்டுச்செவிக்க ள்ளிச்செடி
மேடசிங்கி-புழுக்கொல்லிச்செடி
மேடசிருங்கி-ஆடு தின்னாப்பாளை க்கொடி
மேதகக்கொடி-சவுரிக்கொடி
மேதகவிருட்சம்-கணை யெருமை விருட்சம்
மேதகிக்கற்றாழை -- மருட்கற்றா(ழை
மேதாத்தாமலரை-கற்றாமரை(ழை
மேதாப்புல்லுருவி- மருதுமேற்பு ல்லுருவி
மேதாவிருட்சம் - கற்பக விருட்(சம்
மேதிக்காவிகமரம்.மருதமரம்(சம்
மேதைச்செடி-மகாமேதைசெடி
மேதோசிகமரம்-கருவேல்மரம்
மேந்தியக்கொழுந்து - மரிக்கொ ழுந்து
மேந்தியம்-வெந்தயம்
மேரக்காலீ-பேய்பிசாசு
மேற்காய்நெல்லிச் செடி-மேல்கா ய்நெல்லிச்செடி
மேற்கோலகிக் கொடி-தட்டைப் பயற்றின்கொடி
மேனாட்டுக்கன்னி - பொன்னாங்க(ண்ணிச்செடி
மேனிநீர்.கங்கைநீர்
மேனியிலைச்செடி - குப்பைமேனி
மேனோசகவிருட்சம்-திலகவிருட் சம்

# மை

மைக்கரிப்பான்.கருங்கரிப்பான்
மைக்காரிக் கொன்னை - சரக்கொ ன்னை
மைக்குண்டு மிளகாய்-கருங்குண் டுமிளகாய்
மைக்குருந்து.கருங்குருந்து மரம்
மைக்குரோதிகம்-மிளகு
மைக்குன்றிக்கொடி-கருங்குன்றி மணிக்கொடி
மைக்கொடு வேலி - கருங்கொடி வேலிச்செடி
மைக்கொன்னை - சரக் கொன்னை
மைசாட்சி-குக்கில் (மரம்
மைச்சந்த பாஷாணம்-காச்சற்பா ஷாணம்
மைச்சீரகம்-கருஞ்சீரகம்
மைச்சீரிடப்பாசி-வேப்பம்பாசி
மைச்சுழட்டி-வட்டச்சுழட்டி
மைச்சூகிக்கொன்னை - மைக்கொ ன்னைமரம்
மைச்சூரை-கருஞ்சூரஞ்செடி
மைஞைமரம்.மயில்வஞ்சிமரம்
மைப்போளம்-கரியபோளம்
மையண்டம்-பாம்புமுட்டை
மையற்செடி-ஊமத்தைச்செடி
மையாகிகம்-கடுக்காய்
மையாளிமரம்-கருந்தாளிமரம்
மையிரவிச்சாறு-மருளூமத்தைச் சாறு
மையூமத்தைச் செடி - கருவூமத் தைச்செடி

# மொ

மொக்கப்பட்டு-பலி
மொச்சிமரம்-மலைமொச்சிமரம்

மொச்சேலயச் செடி-காட்டுமொச்சைச்செடி
மொச்சைக்கொடி - வெண்மொச்[சைக்கொடி
மொத்தினி:றுரை (
மொந்தன்வாழை-பேயன்வாழை
மொந்திகா நொச்சி - மலைநொச்சிமரம்
மொந்தைநாரத்தை-பெரு நாரத்தைமரம்
மொந்தைப்பலா-காட்டுப்பலா
மொந்தைப் பூசணி-பெரும் பூசணி
மொந்தைவாழைமரம் - பெருவாழைமரம்
மொலாம்பழம்—மெலாம்பழம்
மொற்பிராமரம் - கூட்டப்பிராய்மரம்

## மோ

மோகணத்திச்செடி - மோகடஞ்செடி
மோகணத்திமரம் - மொந்தைவாழைமரம்
மோகமரம்-பாதிரிமரம்
மோகிச்செடி-கஞ்சாச்செடி
மோசகிச்செடி - கிலுகிலுப்பைச்[செடி
மோசாகமரம்-வாழைமரம்
மோசாகிரீடமரம்-சந்தனமரம்
மோசாசனிமரம்-இலவமரம்
மோசாகிகச் செடி-மருளூமத்தைச்செடி
மோசாபரணிச் செடி - பருத்திச்செடி
மோசிகோபச்செடி.வெதுப்படக்கிச்செடி
மோசைச்செடி-அவுரிச்செடி
மோடாசக்கொடி-வெள்ளரிப்பூசணிக்கொடி
மோதகத்தேக்கு மரம்-கொழுக்கட்டைத்தேக்குமரம்
மோதகமரம்—குதிரைப் பிடுக்கனமரம்
மோதச்செடி—அசமதாகச்செடி
மோதமச் செடி-வெள்ளூமத்தைச்செடி
மோதயந்திச்செடி - காட்டுமல்லிகைச்செடி
மோதனங்கமூலி.சிற்றுமணக்குச்செடி
மோதானிகச்செடி-குடமல்லிகைச்செடி
மோதினிச்செடி—மல்லிகைசெடி
மோதை-வசம்பு
மோரடம்-பெருங்குரும்பை
மோரடவானிச் செடி-மருளூமத்தைச்செடி
மோரடித்தட்டை-கரும்புத்தட்டை
மோரண்டம்-பெருங்குரும்பை
மோராடவேர்-கரும்புவேர்
மோரிச்செடி-வேர்க்கடலைச்செடி
மோர்ச்சாதம்-உறைமோர்ச் சாத[ம்
மோனவயிரி-அருணாக்கயறு

## மௌ

மௌடிதசாலைச் செடி-கரிசாலைச்செடி
மௌட்டியக் கொடி - ஊசலாங்கொடி
மௌட்டியப்பாக்கு—பச்சைப்பாக்கு
மௌட்டேயச்செடி - வெண்டிச்செடி
மௌண்டிதப்பயறு-பாசிப்பயறு
மௌத்காசக் கிழங்கு-வெண்ணுவிக்கிழங்கு
மௌத்திகபாலைக்கொடி - உ-பாலைக்கொடி

மௌலிமுடி—சடைமுடி
மௌவறிக்கொடி-வன மல்லிகைக்கொடி
மௌவாலிப்பூண்டு-குதிரைவாலிப்பூண்டு

# ய

யங்கூரா-அதிவிடையம்
யசுவபரிச்செடி-அலரிச்செடி
யஞ்சலிக் கொடி - வரட்சுண்டிக்கொடி
யதவுமரம்-அத்திமரம்
யவாசிகச்செடி-சிறுகாஞ்சொரிச்செடி
யவானிகம்-ஓமம்
யாகவுப்பு-பூர்ணதியுப்பு
யாதினிக்குலலி-சாராயம்
யாதுகவரிசி-வாலுளுவையரிசி
யாலமரம்-ஆலமரம்
யாலியவுப்பு-வெடியுப்பு
யாவநாளம்-வெண்சோளம்
யானைக்கற்றாழை-கருங்கற்றாழை
யானைக்காலடிப் பூண்டு-வட்டவாரிப்பூண்டு
யானைக்கால்மூலி-யானையடி மூலி
யானைக்கால்வணங்கி-பெருநெருஞ்சிற்செடி
யானைக்காற் சுவடி-அத்திக்காற்சுவடி
யானைக்குன்றிமணி-பெருங் குண்டுமணி
யானைக்கொம்பனதிவிடையம்-அத்திக்கொம்பனதிவிடையம்
யானைக்கொம்பன் வாழை-மொந்தன் வாழைமரம்
யானைத்தடிச்சற் கிழங்கு-புளிநாளைக்கிழங்கு
யானைத்திப்பிலி-பெருந்திப்பிலி
யானைத்தெல்லு-பெருந் தெல்லுக்கொடி
யானைநெருஞ்சிற் செடி—பெருநெருஞ்சிற்செடி
யானைப்பிச்சான்கிழங்கு—புளிநாளைக்கிழங்கு
யானைப்பிடுங்கன்மரம்-குளோப்புக்கொன்னைமரம்
யானைப்புளியமரம்-பொந்தம்புளியமரம்
யானையக்கிச்செடி - துஞ்சரமக்கிச்செடி
யானையறுகு-பெரியஅறுகு
யானைவணங்கிச் செடி-தேட்கொடுக்குச்செடி
யிந்திரியவல்லிக்கொடி-முடக்கத்தான்கொடி
யிலவமரம்.உலகுமரம்
யில்லவமரம்-தேற்றான்மரம்
யீசுரமூலிக் கொடி-பெருமருந்துக்கொடி
யீச்சமரம்-பேரீச்சமரம்
யீஞ்சுச்செடி-சிற்றீச்சஞ்செடி
யீரவெங்காயம்-வெங்காயம்
யுகபத்திரிகை மரம்-அசோகுமரம்
யுகம்பாதிக மரம் - கெட்டிலிங்குமரம்
யுகவத்திரகமரம்-காட்டாத்திமரம்
யுகினிமரம்-புளியமரம்
யுத்திராப்பரிச் செடி-குதிரைக்குளம்படிச்செடி
யுத்தேயப்பூண்டு.குதிரை வாலிப்பூண்டு
யூதிகக்கொடி—காட்டு மல்லிகைக்கொடி
யூதிதாப்பாலை—வெப்பாலைமரம்
யூகிரச்செடி-முல்லைச்செடி
யூபசிமரம்-மலையாத்திமரம்
யூபம்-ஓமம்
யூவாப்பூ-சிறுநாகப்பூ

யெருமைக் கற்றாழை - கருங்கற்றாழை
யெருமைத்தக்காளி - பெருந்தக்காளிச்செடி
யெருமைப்புடோல் - பன்றிப்புடல்
யெவானிச் செடி - அசமதாகச்செடி
யோகசங்கப்பூ-சிறுநாகப்பூ
யோகசச்செடி-கொழுஞ்சிசெடி
யோகதிட்சைநீர்-கங்கைநீர்
யோகதூமச்செடி -செங்களாச்செடி
யோகநாலிக்கற்றாழை - செங்கற்றாழை
யோனிகாரம்-படிகாரம்

## ர

ரகதச்செடி-அத்திச்செடி
ரசகக்கொடி-பீர்க்குக்கொடி
ரசகம்-அத்தகாகம்
ரசகற்பூரம்-ரசகற்பூரம்
ரசபதங்கம்-வாலைரசம்
ரசபலமரம்-தெங்குமரம்
ரசிதம்-வெள்ளி
ரசுணப்பூண்டு-உள்ளிப்பூடு
ரணகாலிக்கொடி - பூனைக்காலிக்கொடி
ரணநாயகச்செடி-அதைபொட்டிச்செடி
ரதிவீடு-பெண்குறி
ரத்தகற்பாசச்செடி - செம்பருத்திச்செடி
ரத்தக்கோவைக் கொடி-கோவைக்கொடி
ரத்தபாகமரம்-தேக்குமரம்
ரத்தபோளம்-இரத்தபோளம்
ரத்திராக்கிரை - அரைக்கிரை
ரஸ்தாளிக்கரும்பு-செங்கரும்புத்தட்டை
ரஸ்தாளிப்பழம - உருசைதரும பழம்
ரஸ்தாளிவாழை-இனிப்புவாழை
ரதநிச்செடி-இலந்தைச்செடி
ரத்திராச்செடி - செங்தொட்டிச்செடி
ரப்பர்செடி-பால்ரப்பர்செடி
ரம்பைச்செடி-கௌரியச்சஞ்செடி
ரவி-சூரியன்
ரவிகதிக்கொடி-கெந்திரவல்லிகொடி
ரவிபுடம்-சூரியபுடம்
ரவியாவிருட்சம்-சாயா விருட்சம்

## ரா

ராக்கசிச் சோளம்-கருஞ்சோளம்
ராக்குசம் திரிகடுகு
ராசவரிமரம்-எலுமிச்சைமரம்
ராசகாமிரப்பூ-ரோஜாப்பூ
ராசசப்பூடு-வெங்காயப்பூடு
ராசவிருட்சம்-அரசமரம
ரிசியாக்கொடி-பூனைக்காலிகொடி
ரிபுஞ்சகச்செடி - அந்திமல்லிகைச்செடி
ருக்குமச் செடி-பொன்னாவரைச்செடி
ருகந்திச்செடி-அழுகண்ணிசெடி
ருத்திரகோப மரம்-மருதோன்றிமரம்
ருத்திரசடைச் செடி-திருநீற்றுப்பச்சைச்செடி
ருத்திரபுட்பிச் செடி-செம்பருத்திச்செடி
ருத்திராட்சம்-உருத்திராக்கம்
ரூச்சிமல்லிகைக் கொடி-காட்டுமல்லிகைக்கொடி
ரூபி-இந்திரகோபப்பூச்சி
ரூமமஸ்தகிசசெடி-சீமைச்செடி
ரேசித்தல்-வாசியைமிழுத்து வயிறுகுதல்

ரேசிவள்ளிக்கொடி-ஆள்வள்ளிக்கொடி
ரேசினிதிப்பிலி-யானைத்திப்பிலி
ரேவல்சின்னிக்கிழங்கு-பேதிக்கிழங்கு
ரைவதக்கொடி-அல்லிக்கொடி
ரைவதாகுறண்டி-பாற்குறண்டிச்செடி
ரொம்முகாக்குவளை-செங்குவளைக்கொடி
ரோகணி-கடுகுரோகணி
ரோசனம்-ஈயங்கொல்லி
ரோஜாப்பூ-சிற்றாமரைப்பூ
ரோஜாவலரிச்செடி-கஷ்தூரியலரிச்செடி
ரோசுக்கீரைத் தண்டு-கறிக்கீரைத்தண்டு
ரோசுத்துளசி-சிவப்புத்துளசி
ரோசுப்பொன்னாங்கண்ணி-சிவப்புப்பொன்னாங்கண்ணிச்செடி
ரோசுமுள்ளிக்கீரை-கறிமுள்ளிக்கீரை
ரோமமாணிக்கங்கொடி-மயிர்மாணிக்கங்கொடி
ரோமவிருட்சம் - உரோமவிருட்சம்
ரோமவேங்கைமரம் - சிகைவேங்கைமரம்
ரௌகாகுவளைக்கொடி - கருங்குவளைக்கொடி
ரௌகா வரசு-புண்ணியவரசமரம்

# ல

லட்சகட்டைமரம்,இலட்சை கெட்டமரம்
லண்டன்பருத்தி-இலண்டன்பருத்தி
லம்பர்க்கொடி-பேய்ச்சுரைக்கொடி
லவங்கச்சாரம்.லவங்கத்திராவகம்
லவங்கப்பட்டை-சன்னலவங்கப்பட்டை
லவங்கப்பத்திரி-கிராம்புப்பத்திரி
லவங்கப்பூ-கிராம்பு
லவங்கப்பூரிதம்-கிராம்பு, சாதிப்பத்திரி
லவங்கமரம்-கிராம்புமரம்
லவணம்-உப்பு
லாகியாவாழை-கல்வாழை
லாகிரிப்பத்திரி-சாதிப்பத்திரி
லாக்கியவீரம்-கொச்சிவீரம்
லாசகப்பயறு-பனிப்பயறு
லாடன்பருத்தி-இலண்டன் பருத்திச்செடி
லிக்கோகொட்டை - நேர்வாளக்கொட்டை
லிங்கச்சூதம்-லிங்கரசம்
லிங்கபாஷாணம் - வன்னிகற்பாஷாணம்
லீப்பாசிதச் செடி-வெள்ளருக்குச்செடி
லீப்பாவிரை-காக்கைகொல்லிவிரை
லுக்காவிரை.பேதானாவிரை
லுக்கோகூரை-கருங்கூரை செடி
லூச்சிகாப்புல்-சோனைப்புல்
லூச்சிப்பிசின்மரம்-குங்கிலியமரம்
லெட்சுமிக்கொடி-தாளிக்கொடி
லெட்சுமிமரம்-சித்தாமரம்
லெக்னுப்பு-கல்லுப்பு
லெப்பு-கங்கையுப்பு
லேச்சுகாச் செடி-மணத்தக்காளிச்செடி
லேவுந்துக்கோரை - உப்பங்கோரை
லைலித்தும்பை-பெருந்தும்பைச்செடி
லைலுப்பாலை-வெட்பாலைமரம்

லொக்கிகாச்செடி-நாயுருவிசெடி
லொத்தான் கொடி-முடக்கொத்தான்கொடி
லோசினம்-கண், நேத்திரம்
லோத்திரக் கிழங்கு-கொட்டிக்கிழங்கு
லோலேகக்கீரை-சாணக்கீரை
லௌகிகமரம்-சந்தனமரம்

## வ

வகத்திராமரம்-வாகைமரம்
வகாரவுப்பு-கல்லுப்பு, கஞ்சியுப்பு, குடத்துநீருப்பு
வகுட்பச்சை சமுத்திராப்பச்சை
வகுண்டகிமரம்-மருதோன்றிமரம்
வகுண்டச்செடி-கவிழ் தும்பைச்செடி
வகுண்டாசிகச் செடி-மலைப்புகையிலைச்செடி
வகுண்டிகைக்கோரை - கஞ்சாங்கோரை
வகுண்டிகாவரிசி-வாலுளுவையரிசி
வகுத்தாலப்பாசி-கொடிப்பாசி
வகுழம்பூ-மகிழம்பூமரம்
வகுளப்பச்சை - சமுத்திராப்பச்சை
வகுளிச்சாரம்-எவாச்சாரம்
வகுளிமாமரம்-மலைமாமரம்
வக்கணத்திமரம்-மாகணத்திமரம்
வக்கிரபுட்பம்-முருங்கைப்பூ
வங்கச்செடி-இண்டஞ்செடி
வங்கணப்பட்டை-செங்கத்தாரிப்பட்டை
வங்கம்-வெள்ளீயம்
வங்கம்பீத்திமரம்-மலை முருங்கைமரம்
வங்காராஜன்-ஈயம்
வங்கணிப்பட்டை-செங்கத்தாரிப்பட்டை
வங்காரவல்லைக் கொடி-வல்லைக்கொடி
வங்கினி-மை-திலகம்-பொட்டு
வங்குசநீர்-கூகைநீர்
வசகச்செடி-கொடிவேலிச்செடி
வசநாவிக் கிழங்கு - நஞ்சுக்கிழங்கு
வசந்தகரு-மாமரம்
வசம்பு-வசரக்கொடி
வசம்புகாக் கொடி - மலைவள்ளிக்கொடி
வசலிகாச்செடி-மல்லிகைச் செடி
வசலைக்கீரை-பசலைக்கீரை
வசனக்கொடி-தாமரைக்கொடி
வசிகரப்பூடு-வெள்ளைப்பூடு
வசிகரமருவு-மருவுச்செடி
வசிகரிச்செடி-கரவெள்ளுச்செடி
வசிதம்-மிளகு
வசிரத்திப்பிலி-யானைத்திப்பிலி
வசிவாசிப்பூ-மீனைப்பூ
வசினிமரம்-வன்னிமரம்
வசுவாசிமரம்-மீனைமரம்
வச்சகம்-மலைமல்லிகைக்கொடி
வச்சதாகச்செடி-கருங்கொள்ளுச்செடி
வச்சனிக் கொம்பு - மஞ்சட்கொம்பு
வச்சனிச் சேம்பு - களற்சேம்புச்செடி
வச்சாதனிக்கொடி-சீந்திற்கொடி
வச்சிதண்ணீர் - இரத்தம்-உதிரம்
வச்சிரசலக்கிழங்கு - கோரைக்கிழங்கு
வச்சிரசிதக் கொடி-பேய்ச்சீந்திற்கொடி
வச்சிரநிம்பமரம்-கருவேம்பு மரம்
வச்சிரபீசகமரம் - கொடிப்புங்குமரம்
வச்சிரபீசக்காய்-கழற்சிக்காய்
வச்சிரப்பால் - எருக்கம்பால், பிரண்டைச்சார்

வச்சிரப்பீலிகம்-வச்சிரம்
வச்சிரமூலி-பிரண்டை,எருக்கு
வச்சிர மேதிப்பால்-எருமைப்பால்
வச்சிரம்-சதுரக்கள்ளி,பிரண்டை எருக்குவச்சிரப்பிலீகம்
வச்சிரவல்லிக்கொடி-பிரண்டைக்கொடி
வச்சிரவிருக்கம்-புல்லுருவி
வச்சிரவேங்கை-மணிமூத்துவேங்கைமரம்
வச்சிராங்கதப்புஷ்பம்-எள்ளுப்பூ
வச்சிராங்கம்-சதுரக்கள்ளி
வச்சிராங்கிக் கொடி-மூக்குத்திக்காய்க்கொடி
வச்சிராங்கிப்பால்-சதுரக்கள்ளிப்பால்
வச்சிராஞ்சிக் கொடி-பிரண்டைக்கொடி
வச்சிராயிலை-பிறவொட்டி யிலை
வஞ்சிக்கொடி-குளவஞ்சிக்கொடி
வஞ்சிப்பால்-முலைப்பால்
வஞ்சிமரம்-சுவேதவஞ்சிமரம்
வஞ்சிமாலிக்கொடி - கொத்தான்
வஞ்சிராச்செடி-கொடுவேலிச்செடி
வஞ்சிரிமரம்-விருசுமரம்
வஞ்சுளமரம்-வேங்கைமரம்
வஞ்சூலிகச்செடி - சூரத்தாவரைச்செடி
வடகாதியமரம்-ஆலமரம்
வடகீலியச்செடி-சூரஞ்செடி
வடங்கன்-வெங்காயம்
வடம்-இணங்கன்,வெடியுப்பு
வடுகன்-வயிரவன்
வட்டக்கிலு கிலுப்பை-மஞ்சட்கிலுகிலுப்பைச்செடி
வட்டககிளாச்செடி-களாச் செடி
வட்டக்குளம்படி-கழுதைக் குளம்படிக்கொடி
வட்டக்குளிகச்செடி - மேகநிறச்செவ்வந்திக்கொடி
வட்டச்சாரணை-வெள்ளை வட்டச்சாரணைக்கொடி
வட்டத்தகரை,தகரைச்செடி
வட்டத்தாமரை-செந்தாமரை
வட்டத்திருப்பிச்செடி-ஆடுதின்னாப்பாளை
வட்டத்துத்தி-சிறுதுத்தி
வட்டநரிமிரட்டி - வட்டக்கிலுகிலுப்பை
வட்டவழுக்கைமாம் - வழுக்கைமரம்
வட்டுமுள்ளிக்கீரை-கறிமுள்ளிக்கீரை
வண்டர்-துருசு
வண்டலைக்கீரை-வள்ளைக்கீரை
வண்டாழைமரம் - இலைத்தாழைமரம்
வண்டிகிக்கொட்டை - முந்திரிக்கொட்டை
வண்டிரச்செடி - பேராமுட்டிச்செடி
வண்டிரம்-வாகைமேற்புல்லுரி
வண்டில்-வெங்காயம்
வண்கிகாமரம்-வன்னிமரம்
வண்டுகொல்லிப்பாளை - ஆடுதின்னாப்பாளைக்கொடி
வண்டுகொல்லிமரம்-செண்பகமரம்
வண்டுறைமரம்-வேங்கைமரம்
வண்டுணிக்கொடி.தாமரைகொடி
வண்டுளச்செடி-நந்தியாவட்டைச்செடி
வண்ணுணவுரி-நீலவுரிச்செடி
வண்ணுனமூக்கு-சூதகம்
வதனுகப்பூச்செடி - வாடாமல்லிகைச்செடி
வதுவடிமரம்-பாலைமரம்
வதுவைக்கண்ணிச் செடி - பெரியாணங்கைச்செடி

வத்தகமரம்-வெட்பாலைமரம
வத்தகிமுள்ளிச்செடி - காட்டுமுள்ளிச்செடி.
வத்தமச்செடி-ஆமணக்குச்செடி
வத்திரயினி-மயக்கம்
வத்திரதாறுச்செடி - செம்புளிச்சைச்செடி
வத்திரபஞ்சகச் செடி - சிவகரந்தைச்செடி
வத்திரோணமரம்-பெருமரம்
வஸ்து-மதுபானம்
வஸ்துநீர்-சூதகநீர்
வந்துலப்பாலைக் கொடி - பங்கம்பாலைக்கொடி
வந்தூலச் செடி-வெள்ளூமத்தைச்செடி
வயகாண்டகச் செடி - கவிழ்தும்பைச்செடி
வயக்கேதனச்செடி - கானல்மிளகாய்ச்செடி
வயதரக்காய்-கடுக்காய்
வயந்தியச்செடி - குத்துப்பிடாரிச்செடி
வயலிகாப் பூண்டு-கோனியப் பூண்டு
வயலிக்கிழங்கு-முள்ளங்கிக் கிழங்கு
வயல்நெட்டிச் செடி-நீர்நெட்டிச் செடி
வயல்வேளைச்செடி-வயலிச் செடி
வயவாசச்செடி-கொழுஞ்சிசெடி
வயளைக்கொடி-பசளைக்கொடி
வயற்கோவிமரம் - வெண் தேக்குமரம்
வயாதிகக்கொடி-சீந்திற்கொடி
வயிகாப்பிசின்-வெளிச்சிப் பிசின்
வயிரகாணிக்கொடி - பெருநெருஞ்சிக்கொடி
வயிரப்பண்ணை - பனைமரப்பண்ணை
வயிரவல்லிக் கொடி-பிரண்டைக் கொடி
வயிரவளைப்பயறு-நரிப்பயறு
வயிரவாரிணிக்கீரை-சிறுகீரை
வயிரவிச்சாரணை-சத்திச்சாரணை
வயிரவேர்-சாயவேர்
வயிலத்தி-உள்ளங்கால்
வயிலத்திருகி-உள்ளங்கை
வயேசடமஞ்சள்-மரமஞ்சள்
வரகரிசி-புனலரிசி
வரப்புக்கிடா-நண்டு
வரற்சுண்டி-நெட்டிக்கொடி
வரற்சூரிச்செடி-நத்தைச்சூரிச் செடி
வரற்பூலா-நீர்ப்பூலா
வரற்பூலிகாச்செடி-முள்ளி செடி
வராகபுடம்-ஐம்பதெருக் கொண்டபன்றிப்புடம்
வராகரக்கிழங்கு-அமுக்கிராக் கிழங்கு
வராகரப்பூடு-கூத்தன்குதம்பைச் செடி
வராகிச்சாரணை-சத்திச்சாரணைக் கொடி
வராகியரத்தை-சிற்றரத்தை
வராடிகக்காய்-வெண்மிளகாய்
வராலிகம்-ஈரல்
வராளியிலைச் செடி-விராலியிலைச் செடி
வராணிகமரம்-பனைமரம்
வரிகாரம்-பொரிகாரம்
வரிக்கடுக்காய்-மஞ்சட்கடுக்காய்
வரிக்கற் றாழை - குருவரிக்கற்றாழை
வரிக்கன்னிச் செடி-பொன்னாங்கண்ணிச்செடி
வரிக்காளான்-காளான்
வரிக்கிரீசமரம்-முள்ளிலவமரம்
வரிக்குமிட்டி - பேய்க்குமட்டிக் கொடி
வரிக்கோரை-பாய்க்கோரை

வரிநகக்கொன்னை - புலிநகக்கொன்னைமரம்
வரிப்பச்சை-நாகப்பச்சை
வரிப்பிரோதிதம்-சதகுப்பை
வரிப்பீகிக்குமுட்டி - பேய்க்குமுட்டிக்கொடி
வரிப்பீர்க்கு-பீர்க்குக்கொடி
வரியரிசி-சீரகம்
வரிவழிக்கிழங்கு - தண்ணீர்விட்டான்கிழங்கு
வரிவழுக்கமரம்-வழுக்கைமரம்
வரிவளிக்கற்றாழை - குமரிக்கற்றாழை
வரிவள்ளிக்கொடி-வெற்றிலைவள்ளிக்கொடி
வரிவனவிருட்சம்-தில்லை விருட்சம்
வரீயமரம்-பெருஞ்சூலிமரம்
வருக்கரைமரம்-பலாமரம்
வருக்கைக்கனி-பலாப்பழம்
வருடகக் கொடி - முடக் கொத்தான்
வருடகச்செடி-பெருஞ்செந்தொட்டி
வருணவிந்துசிப்பி-முத்துச்சிப்பி
வருந்துருமரம்-கோங்குமரம்
வருவிக்குடை-முழங்கால்சிப்பி
வருவியம்-முழங்கால்
வருவிளிமரம்-ஆவிமரம்
வரைப்பத்திரி-மாசிப்பத்திரி
வரைப்பாசி-கற்பாசி
வரைப்பாலை-மலைப்பாலைமரம்
வரைமாமரம்-மலைமாமரம்
வரையறுத்தான் கொடி-பேய்த்தம்பட்டையவரை
வரையாலமரம்-கல்லாலமரம்
வரையாலிகமரம்-முன்னைமரம்
வரைபெருக்கிலைமரம்-மலை பெருக்கிலைமரம்
வலம்புரிக்காய்-திருகுக்காய்
வலினமரம்-பொறித்தேற்றாமரம்
வலைக்காளான்-மஞ்சட்காளான்
வலைசிகாத்தினை-செந்தினை
வல்லைகமரம்-வாழைமரம்
வல்லாகினிக்கொடி-கருங்கொடி
வல்லாரைக்கொடி - நீர்வல்லாரைக்கொடி
வல்லிகக்கொடி - செவ்வல்லிக்கொடி
வல்லிகச்செடி-மிளகுச்செடி
வல்லிக்காய்விரை,முள்முருங்கைவிதை
வல்லிருமரம்-முருக்குமரம்
வல்லிலோமக்காய்-வலம்புரிக்காய்
வல்லைமரம்-புனல்முருங்கை மரம்
வவ்வியமரம் - மணிமுத்து வேங்கைமரம்
வழலை-சவுக்காரக்குரு,பூநீறிலெடுத்தசாரம்
வழலைநீர் - கன்னிக்குடநீர்,சவுக்காரநீர்
வழிபடுதவசி-மருட்கற்றாழை
வழியாமணக்கு-புல்லாமணக்கு
வழுக்கைப்பலாமரம்-வேர்ப்பலாமரம்
வழுக்கைமரம் - வட்ட வழுக்கைமரம்
வழுக்கோபிகக்கீரை.முளைக்கீரை
வழுதலைச்செடி-கத்திரிச்செடி
வழுத்தேமாமரம்-மலைமாமரம்
வழுவைக் கொடி - நாய்ப்பாகற்கொடி
வழுவைமரம்-மலை பெருக்கிலைமரம்
வளையம்-சீனம்
வளைய வுப்பு-வெண்காரவுப்பு,மதியுப்பு
வள்ளற்கீரை - வல்லாரைக் கீரை
வள்ளிகாக்கொடி-சீந்திற்கொடி
வள்ளிகாத்தினை-வெண்தினை
வள்ளிக்கிழங்கு-பழிக்கிழங்கு

வள்ளியம்-மிளகு
வள்ளிரிக்கொடி - காட்டுவெள்ளரிக்கொடி
வள்ளைக்கொடி-வங்கார வள்ளைக்கொடி
வறகுவியரிசி-கார்போகவரிசி
வறட்சுண்டிக்கொடி-நெட்டிக்கொடி
வறதாருக் கீரை - கறிமுள்ளிக்கீரை
வறப்பீகச் செடி.-மிளகாய்நங்கைச்செடி
வற்கமோருகச் செடி - நாயுருவிச்செடி
வற்கலப்பட்டை - மரவுரிப் பட்டை
வற்குசாவரிசி-கார்போகவரிசி
வனசகதலிமரம் - காட்டுவாழைமரம்
வனசக்கொடி-தாமரைக்கொடி
வனசத்துளசி-முட்துளசி
வனசமூலிவிதை-நாயுருவி விதை
வனசரஞ்சனி-ஸ்தன்னியம்
வனசவாரி-தனம்
வனசீவிமரம்-வன்னிமரம்
வனசோபனக்கொடி - தாமரைக்கொடி
வனதீபம்-சோதிவிருட்சம்
வனத்துமுட்டை-காட்டெருமுட்டை
வனத்தெருவு-காட்டெருவு
வனத்தேரிச்செடி-ஆவாஞ்செடி
வனநங்கை-மலைநங்கைச்செடி
வனப்பிச்சிச்செடி-தகரைச்செடி
வனப்பிரமி-பெரும்பிரமிச்செடி
வனமஞ்சரிக் கொடி - கோழியவரைக்கொடி
வனமல்லிகை - காட்டுமல்லிகைக்கொடி
வனமாகியமூலி-ஆவாஞ்செடி
வனமாசச் செடி - கொடுவேலிச்செடி
வனமாசிகக்கீரை.முள்ளிக்கீரைச்செடி
வனமாமிச்செடி-பிரமிச்செடி
வனமாலைச்செடி-மருளுமத்தைச்செடி
வனமிருத்திரிச்செடி - காயாங்குலைச்செடி
வனமிருந்தமூலிச்செடி-ஆவாரைச்செடி
வனமிரட்டிக் கொடி - மணியாட்டங்கொடி
வனமுசுட்டைக் கொடி-மலைமுசுட்டைக்கொடி
வனமூலிகை-ஆவாரைச்செடி
வனலட்சுமிமரம்-வாழைமரம்
வனவிசம்-சந்தனம்
வன்னி-லிங்கம்,நெருப்பு
வன்னிகாவாகை-வன்னிவாகை
வன்னிகைக் கொடி - பொடுதலைக்கொடி
வன்னிக்காசிகச்செடி - முள்ளுக்கத்திரிச்செடி
வன்னிக்காரச்செடி-அக்கிராகாரச்செடி
வன்னிக்கீரைச்செடி - முள்ளிக்கீரைச்செடி
வன்னிதீ-நவச்சாரம்
வன்னித்துடரிச் செடி-முன்றுடரிச்செடி
வன்னித்தும்பை-பெருந்தும்பைச்செடி
வன்னிப்பிரியச்செடி - கொடுவேலிச்செடி
வன்னிமரம்-வனசீவிகமரம்
வன்னிமுருங்கைமரம்-முள்ளுருங்கைமரம்
வன்னியாமச்செடி-நத்தைச்செடி

வன்னியின் கற்பம் - இலிங்க பாஷாணம்
வன்னிவாகைமரம்-கருவாகைமரம்
வன்னிவிருட்சம்-சுடர்விருட்சம்

# வா

வாகவிக்கீரை-செங்கீரை
வாகனுசிப்பபறு-பனிப்பயறு
வாகினிமரம்—பாதிரிமரம்
வாகினிமுந்திரி-கொடிமுந்திரி
வாகுசக்கீரை-குப்பைக்கீரை
வாகுனிக்காரை - பெருங் காரைமரம்
வாகுனிச்செடி-கீழ்காய்நெல்லி
வாகைச்செடி-நிலவாகைச்செடி
வாகைமரம்-பெருவாகைமரம்
வாகைமேற்புல்லுருவி - வாகுமேற்புல்லுருவி
வாசந்திக்கொடி-குருக்கத் திக்கொடி
வாசந்திரமல்லி - கொத்தமல்லிச்செடி
வாசப்பச்சை-மாசிப்பச்சை
வாசவுப்பு-கல்லுப்பு
வாசனைப்புல்-தரகம்புல்
வாசனைப்பூலிகம்-சந்தன அத்தர்
வாசனைமரம்-சந்தனமரம்
வாசனைமருவி—புனுகு,புழுகு
வாசனைமல்லிகை-சாதி மல்லிகைச்செடி
வாசனை யலரி - கஸ்தூரி யாளிச்செடி
வாசனைவெற்றிலை - கற்பூர வெற்றிலை
வாசனைவேதிகம்-கிராம்பு
வாசனைவேர்-விலாமிச்சைவேர்
வாசாங்க்ச் சாரணை - மூக்கரைச்சாரணைக்கொடி
வாசாங்கியம்-மிளகு
வாசாணிமூலி - செவ்வாமணக்குச்செடி
வாசாதிச் செடி-ஆடாதோடைச்
வாசித்தண்டு—ஆணகுறி [செடி
வாசிநீர்-ஆகாயநீர்
வாசுகி-நாகம்
வாடாப்பூ-தென்னம்பூ,கொய்யாதபூ,பனம்பூ
வாடாமல்லிகை - சிவப்பு வாடாமல்லிகைச்செடி
வாணகத்திமரம்-அரசமரம்
வாணிமலர்.வெண்டாமரைமலர்
வாதகிச்செடி - ஆடாதோடைச்
வாதசிரோமணி-நவச்சாரம்
வாதநாசனி-கொடிக்கள்ளி
வாதபோதமரம்-பலாசுமரம்
வாதமக்கிச்செடி - மேகசஞ்சீவிச்
வாதமடக்கி-தழுதாழை (செடி
வாதமண்டிகச்செடி-வாதமடக்கி
வாதமரம்-வில்வமரம் [ச்செடி
வாதமையுப்பு-கரியுப்பு
வாதரக்காட்சி - அம்பலக்காட்சி
வாதரங்கம்-தேள் (மரப்
வாதரங்கிகமரம்-அரசமரம்
வாதவைரிச் செடி - ஆமணக்குச்செடி.
வாதாங்கொட்டை மரம் - வாதுமைமரம்
வாதாசணிப்பூடு-கீரிப்பூடு
வாதாடுகாளிச்செடி-மணத்தக்காளிச்செடி
வாதாணமரம்-தேக்குமரம்
வாதாரிச்செடி.ஆமணக்குச்செடி
வாதிகாரம்—வெடிகாரம்
வாதிவக்கொடி-வஞ்சிக்கொடி
வாதுகைச்செடி-நிலவாகைச்செ
வாதூகச்செடி-சேம்புச்செடி (பு
வாதூகிகக்கொடி — மெழுகுபேய்ப்பீர்க்கங்கொடி

வாதைவரிச் செடி - ஆமணக்குச்செடி
வாத்தியச்சுரை-கின்னரிச்சுரை
வாத்துகாக்கொடி-மெழுகு பீர்க்கங்கொடி
வாணகந்தியுப்பு-வெடியுப்பு
வாணகாந்திகப்புல்-சோதிப்புல்
வாணிகச்செடி - அசமதாகச்செடி
வாணிதிமரம்-மூங்கில்மரம்
வாண்டியமுட்டிச்செடி-பேராமுட்டிச்செடி
வாந்தகிமுன்னைமரம் - மூவிலைமுன்னைமரம்
வாந்திரியமரம்-தான்றிமரம்
வாபிதம்-வரகு
வாமகமாமிசம்-மூடிமாமிசம்
வாமசுக்கிலவிரை-பொன்னூவிரை
வாமநீர்-காமநீர்
வாமரோதயம்-ஈரல்
வாமலோசிகம்-கற்றுழை
வாமல்மேனிக்கற்றுழை-சோற்றுக்கற்றுழை
வாமிகக்கொழுப்பு-சீரக்கொழுப்பு
வாம்பல்மரம்-மூங்கில்மரம்
வாயசவிரை-காக்கைகொல்லிவிரை
வாய்கட்டிமூலி-குத்துப்பிடாரிச்செடி
வாய்க்காற்சடைச்சி - வெளுப்படகி
வாய்விளங்கம்-பரிவிளங்கம்
வாரகிப்பழம்-சமுத்திராப்பழம்
வாரணமரம்-மாவுலிங்கமரம்
வாரணமாசிகம்-மூவிலைக்குருந்துமரம்
வாரணமுட்டை-கோழிமுட்டை
வாரணவல்லபை மரம்-வாழைமரம்

வாரிசாதமலர்-தாமரைமலர்
வாரிதிவிந்து-கடல்நுரை
வாரிப்பிரசாதமரம்-தேற்றுமரம்
வாரீசக்கொடி-தாமரைக்கொடி
வாருகக்கொடி-வெள்ளரிக்கொடி
வாருசிக்கொடி - மொச்சைக்கொடி
வாருணமரம்-மாவலிங்கமரம்
வாருதிப்பாசி-கடற்பாசி
வார்த்தகிக்கற்றாழை - குமரிக்கற்றாழை
வார்த்தகுக்கொடி - முல்லைக்கொடி
வார்த்தாகிகச்செடி-சிறுவழுதலைச்செடி
வார்த்தாசகச் செடி-மோகனத்திச்செடி
வார்த்தாபகச்செடி-கத்திரிச்செடி
வார்ப்பனை-கூந்தற்பனைமரம்
வார்மூலி-பூநீறு,வெடியுப்பு
வாலம்ககயப்பட்டை-கொஞ்சிப்பட்டை
வாலபத்திரமரம்-கருங்காலிமரம்
வாலபாகிக மரம் - மொந்தன்வாழைமரம்
வாலானரிசி-வீரியத்தரிசி
வாலிகைக் கீரை-கொடிக்காசரைக்கீரை
வாலுங்கிக் காய் - கக்கரிக் காய்க்கொடி
வாலுவித்தேக்கு-மோதகத் தேக்குமரம்
வாலுளுவையரிசி-வாலானரிசி
வாலூகம்-விஷம்
வால்லந்திரபோளம் - வெண்போளம்
வாலைசாரம்-சத்திச்சாரம்
வாலைநீர்-வழலைநீர்,திராவகம்
வால்மிளகு-ஒளதசியமிளகு
வால்மீகமரம்-மராமரம்
வால்மீகிச்சோறு-புற்றுஞ்சோறு
வாழுகிகம்-குந்துருக்கம்

வாழுகிச்சாரணை.வட்டச்சாரணை
க்கொடி
வாழ்புளப்பிச்செடி - முல்லைச்
செடி
வாழ்மகி யரசு - புண்ணிய வரசு
மரம்
வாழ்ஞதிக் கொடி - தூதுவளைக்
வாழைமரம்-கதலிமரம் (கொடி
வாழ்மடந்தை-அரிதாரம்
வாளம்-நேர் வாளம்
வாளவருவி-குடியிருப்போர்
வாளவரைக்கொடி-வெள்ளை யவ
ரைக்கொடி
வாளாகக்கொடி-கொடிமுல்லை
வாற்கோதுமையரிசி-பார்லியரிசி
வானகிநீர்ச்சாதம்-மோர்ச் சாதம்
வானக்கெந்தி-கெந்தகம்
வானத்திமிறி-தைலம்
வானபத்திரமரம்-பலாசுமரம்
வானபாசியமரம்-இலட்சைக்கெ
ட்டமரம்
வானப்பிராதீதமரம் - இலுப்பை
மரம்
வானமுட்டி மரம் - நெட்டிலிங்க
மரம்
வானவல்லிக்கொடி - மின்னிக்
வானவுப்பு-வெடியுப்பு [கொடி
வாஞசிப்பூ-ரோஜாப்பு
வாஞவியரிசி-கார்போகவரிசி
வான்கொடி.ஆகாயவல்லிக்கொடி
வான்மீகச்சோறு-புற்றுஞ்சோறு
வான்மிகப்பூ-குங்குமப்பூ
வான்முட்டிமரம் - நெட்டிலிங்கு
மரம்
வான்மேனி-கொட்டான்மரம்

## வி

விகசதிக்கொடி-குறட்டைக்கொ
விகசஞதியறுகு-யானையறுகு (டி
விகசிதமரம்-புன்முருக்குமரம்
விகசிதமிச்சை - கொடியெலிமிச்
சை
விகுரிச்செடி - வெள்ளெருக்குச்
செடி
விகுளிமரம்-விடத்தலைமரம்
விசத்துருகக் கொடி - அடம்புக்
கொடி
விசமுட்டிமரம்-காஞ்சிரைமரம்
விசராகமரம்-மகிழமரம்.
விசலிக்கொடி-சீந்திற்கொடி
விசலியக் கிழங்கு-வெந்தோன்றி
க்கிழங்கு
விசவல்லிச் செடி-கீழ்காய்நெல்லி
ச்செடி
விசாதப்பசளைக்கொடி-கொத்து
ப்பசளைக்கொடி
விசாலமரம்-கடம்பமரம்
விசானபூமி-மயானம்
விசித்தி-கடுகு
விசிப்புக்கிழங்கு-விப்புருதிக்கிழ
விசிமந்தமரம்-வேப்பமரம் (ங்கு
விசிரகந்தி-பொன்னரிதாரம்
விசுதகக்கொடி-கறிப்புடோற்
கொடி
விசுமிக்காரை-மதுர்காரைச்செடி
விசுவதிக்கம்-அதிவிடையம்
விசுவநாதச்செடி - சிவகரந்தைச்
செடி
விசுவாசிமரம்-வேங்கைமரம்
விசுவாமித்திரப்புல் - தெற்பைப்
புல்
விச்சதையக்கொடி- புல்லூரிக்
கொடி
விச்சயப்பால் மரம் - ரப்பர்பால்
மரம்
விச்சரந்திச்செடி - வெள்ளெருக்
குச்செடி
விச்சலித்தெல்லு - யானைத்தெல்
லுக்கொடி

விச்சில்லிக்கொடி.பேய்த்தும்மட்டிக்கொடி
விச்சிரகாத்திப்பிலி - யானைத்திப்பிலி
விச்சிரப்புல்-கோரைப்புல்
விச்சுவனிமரம்-பூதமரம்
விச்சைச்செடி-வெள்ளெருக்குச்செடி
விஞ்சுதாரகச்செடி - மலையெருக்செடி
விடக்குநாறி-புறங்கைநாறிச்செடி
விடங்கச் செடி - சிற்றுமுட்டிச்செடி
விடத்தலைமரம்-பொடித்தலைமரம்
விடத்தாகிகச்செடி - யானைநெருச்சிற்செடி
விடத்தாரி-விஷத்தாளிக்கொடி
விடத்தும்புலாமரம் - விஷத்தும்புலாமரம்
விடத்தேரிச்செடி-விடப் பூரைச்செடி
விடப்பதிக்கொடி-ஆடு தீண்டாப்பாளைக்கொடி
விடப்பாலை-விஷப்பாலைக்கொடி
விடப்பூலாமரம்-விஷப்பூலாமரம்
விடமரக்கனி-எட்டிப்பழம்
விடமருது.விஷமருது
விஷமல்லிகாச் செடி - நாகமல்லிகைச்செடி
விடமல்லிகை - நாகையல்லிகைச்செடி
விடமீட்டிமரம்-காஞ்சிரைமரம்
விடமீனமரம்-பிராமுட்டிமரம்
விடமுட்டிமரம்-காஞ்சிரைமரம்
விஷமூங்கில்-விடமூங்கிற்செடி
விஷமூலகப்பாலை - விடப்பாலைக்கொடி
விஷ்ணுகரந்தை-விஷ்ணுகாந்திச்செடி
விஷ்ணுதுளசி-திருத்துளசி
விஷ்ணுமனைவி-அரிதாரம்
விஷ்ணுவேதைச்செடி-கருந்துளசிச்செடி
விடைதாரிகச்செடி.யானைமயக்கிச்செடி
விடையம்-அதிவிடையம்[ச்செடி
விடையூர்திச்செடி-சிவகரந்தைச்
விட்டரிமரம்-அகத்திமரம்(செடி
விட்டிகாப்பருத்தி-லண்டன்பருத்திச்செடி
விட்டிலாமரம்-பிராமரம்
விட்டுணுப்பிரியச் செடி-துளசிச்செடி
விண்ணுகிப்புல்-காவட்டம்புல்
விண்ணுங்குமரம்-நாங்கில்மரம்
விண்ணுரகமரம்-மாதளைமரம்
விண்ணுரிகக் கொடி - அப்பைக்கோவைக்கொடி
விண்ணுரோகணி-கடுகுரோகணி
விண்ணுகக்கீரை-கறிமுள்ளிக்கீரை
விண்பகவகத்தி-சிவப்பகத்திமர
விண்பரிமரம்-மூங்கில்மரம் [ம்
விண்மணிச்செடி - சூரியகாந்திச்செடி
விதாரிகச் செடி - புன்முருக்குச்செடி
விதாருகக்கிழங்கு - கருணைக்கிழ
விதிபிறந்தமதி-நாபிக்கொடி[ங்கு
விதிபிறந்த விடையம்-யானைக்கொம்பனதிவிடையம்
விதுகங்காய்-மிதுக்கங்காய்
விதைகாலிகச்செடி-வட்டக்கிலுகிலுப்பைச்செடி
விதையத்திப் பழம்-சீமையத்திப்
வித்திகப்பூ-இந்துப்பு (பழம்
வித்தியமரம்-தான்றிமரம்
வித்திரகச் செடி-வெள்ளெருக்குச்செடி

வித்திராசிதக் கொடி-வள்ளைக் கொடி
வித்துகநீர்-கங்கைநீர்
வித்துசக்கொடி-தாளிக்கொடி
விஸ்வாமித்திரன் புல்-தருப்பைப் புல்
விநாயகர் கைப்பிடி-யானைக் கொம்பு
விந்தபாஷாணம்-குதிரைப்பற்பா ஷாணம்
விந்தியவசனி-கோஷ்டம்
விந்துகவுளிச் செடி-சடைச்சிச் செடி
விந்தூகம்-சாதிலிங்கம்
விந்தையப்பட்டை-செங்கத்தா ரிப்பட்டை
விபணச்செடி-அச்சஞ்செடி
விபத்தமரம்-காஞ்சிரைமரம்
விபனப் பூடு-பாம்பு கொல்லிப் பூடு,கிரிப்பூடு
விபீதமரம்-தான்றிமரம்
விபுதகவஞ்சிக்கொடி-வஞ்சிக் கொடி
விபுதகந்தச்செடி-நெய்ச்சிட்டிச் செடி
விப்புருதிக்கிழங்கு-பலபிள்ளைக் கிழங்கு
விப்புருதிநாயகச்செடி-அழுக்கி ராச்செடி
விமலோதயச் செடி-வெந்தயச் செடி
விம்பகக்கொடி-கோவைக்கொடி
விம்படச்செடி-கடுகுச்செடி
வியல்கஞகம்-திப்பிலி
வியல்காதிகமரம்-வஞ்சிமரம்
வியல்பூதிமரம்-வில்வமரம்
வியன்மணி விருட்சம்-சோதிவிரு ட்சம்
வியாக்கிரிக்கொடி-கண்டங் கத்தி ரிக்கொடி
வியாசாக்கியப்புல்-பூனைப்புல்
வியாசிதம்-கோஷ்டம்
வியாப்பிரகக்கொடி-வள்ளைக் கொடி
வியாப்பிரயம்-கோஷ்டம்
வியாமகந்திப்புல்-பேய்ப்புல்
வியானவப்பூடு-மயிற்காலடிப்பூடு
விரகதக்கொடி-வெண்சாரணைக் கொடி
விரசகப்பாலைமரம்-குடசப் பாலை மரம்
விரணம்போக்கிப்பாளை-ஆடுதின் றாப்பாளை
விரல்தெரிச்செடி-நாயுருவிச்செடி
விரவியப்பருத்தி-இலாடன்பருத் திச்செடி
விரவிக்கொடி-வெள்ளரிக்கொடி
விராகனிடை-முப்பத்திரண்டு குன்றிமணியிடை
விராலிச்செடி-விலாரிச்செடி
விராற்சகச்செடி-பூலாஞ்செடி
விரிசிராச் செடி-கையாந்தகரைச் செடி
விரிஞ்சனன்செடி-பிரமதண்டிச் செடி
விரிபூடகம்-பற்படாகம்
விரியன் பாஷாணம்-பறங்கிப்பா ஷாணம்
விரீகியரிசி-நெல்லரிசி
விரீடமரம்-வெட்பாலைமரம்
விருகக்கிழங்கு-வெருகங்கிழங்கு
விருகற்பாதமரம்-ஆலமரம்
விருசகத்திப்புல்-அறுகம்புல்
விருசகாக்காந்தைச் செடி-விஷ் ணுகாந்தைச்செடி
விருசமரம்-நரிவிளிமரம்
விருசலப்புல்-விஸ்வாமித்திரன் புல்
விருசலாபக்கொடி-பெருநெருஞ் சிக்கொடி
விருசாவிகமரம்-வாதாங்கொட் டைமரம்

விருச்சநாதமரம்-ஆலமரம்
விருச்சிகக்கொடி-சாரணைகொடி
விருச்சிகாவாழைமரம்-நாட்டுவாழைமரம்
விருச்சிகொடுக்குச்செடி - தேள்கொடுக்குச்செடி
விருச்சோபலமரம் - தென்னை
விருதச்செடி - வெள்ளெருக்குச்செடி
விருதாகசக்கொடி - மெழுகுபேய்ப்பீர்க்குக்கொடி
விருத்தபன்னிப்பாளை.பங்கம்பாளைக்கொடி
விருத்தபுட்பமரம்-வாகைமரம்
விருத்தமச்செடி - நிலக்கடம்புச்செடி
விருத்தமல்லிகை - குடமல்லிகைச்செடி
விருத்தமாலிமரம்-விளாமரம்
விருத்திமரம்-மருதுமரம்
விருத்தியச்செடி - பெருவீடுகொள்ளுச்செடி
விருந்தமரம்-வேப்பமரம்
விருந்தயம்-கற்கடகசிங்கி
விருமன்னியக்கொட்டை - சேங்கொட்டை
விரும்பாடிகச்செடி-அழுகண்ணிச்செடி
விருவிட்டான்கொடி - வெரிவிட்டான்கொடி
விலக்குநாள்-மாதவிடாய்
விலங்கலம்-சதகுப்பை
விலாமிச்சைவேர்-இருவேலிவேர்
விலாரிச்செடி-விலாமிச்சைசெடி
விலுபன்னிக்குரும்பை.உதிர்குரும்பை
விலேபிகக் கொடி - நீர்ச்சுண்டிக்கொடி
வில்லுகாச்சடைச்சி - வாய்க்காற்சடைச்சிச்செடி
வில்லுவமரம்-வில்வமரம்
வில்லோசைநீர்-சுத்தகங்கை
வில்வமரம்-தேவதாமரம்
விவகாதமரம்-செந்தணக்குமரம்
விழலரிசி-வாலானரிசி
விழல்மூரிமரம்-பேரீச்சமரம்
விழுதரசமரம்-புண்ணியவரசமரம்
விழுதிகாவிரை-ஆலவிரை
விழுதிச்செடி-வீழிச்செடி
விழுதுமரம்.ஆலமரம்
விளகக்கொட்டை - சேங்கொட்டை
விளக்குநீர்-கங்கைநீர்
விளக்கெண்ணெய் - முத்தெண்ணெய்
விளங்கமரம்-வாழைமரம்
விளங்கம்-வாயுவிளங்கம்
விளங்கரத்தை-சிற்றரத்தை
விளத்தாருக் கொடி - அடம்புக்கொடி
விளம்பிவஞ்சிக் கொடி-குறிஞ்சிக்கொடி
விளவுமரம்-விளாமரம்
விளாத்திச்செடி-பீச்சுவிளாத்தி
விளாத்திராவரிசி-வாற்கோதுமையரிசி
விளாமரம்-பெருவிளாமரம்
விறுமதருமரம்-புன்முருக்குமரம்
விறுமத்தும்பிலா.விஷத்தும்பிலாமரம்
விறுமமூலி-பிரமிச்செடி
விறைப்புசிக் கொடி - கருடன்கொடி
விற்புருதிநாயகச்செடி - அழுக்கிராச்செடி
வினகமரம்-சேங்கொட்டை மரம்
வினைவிகாசச் செடி - குப்பைமேனிச்செடி
வின்னுகரோகணி-கடுகுரோகணி

## வீ

வீசகாமரம்-வேங்கைமரம்
வீச்சன்னியமரம்-வில்வமரம்

வீச்சன்னிபம்-மந்திரம்
வீடிகையிலை-வெற்றிலை
வீடிக்கொடி-வேரிலாக் கொத்தான்கொடி
வீட்டுத்திமரம்-அகத்திமரம்
வீதசாகிவேர்-விலாமிச்சைவேர்
வீதசோகமரம்-அசோகமரம்
வீதபுட்பி-குக்கில்
வீத்துகக் கொடி-வெள்ளரிக்கொடி
வீத்துகிச்செடி-வீழிச்செடி
வீத்துகிகம்-சதகுப்பை
வீரசாகிக்கொட்டை-சேங்கொட்டை
வீரசாகிமாம்-அழிஞ்சில்மரம்
வீரச்செல்விச்சாரணை-சத்திச்சாரணை
வீரணிவேர்-விலாமிச்சைவேர்
வீரதத்துவவேர்-கொடிவேலிவேர்
வீரதருமரம்-மருதமரம்
வீரதாருமரம்-விடத்தலைமரம்
வீரபாஷாணம்-சவ்வீர பாஷாணம்
வீரமரம்-வேங்கைமரம்
வீரிடமரம்-நாவல்மரம்
வீரிணிகாமரம்-வில்வமரம்
வீரிப்பால்-எருக்கம்பால்
வீரிப்பாவிகவிரை-எட்டிவிரை
வீரிப்பாளைக் கொடி - பங்கம்பாளைக்கொடி
வீரிமுத்தெண்ணை - விளக்கெண்ணெய்
வீரியதேசிச் செடி - வல்லாரைச்செடி
வீரியத்தரிசி-வாளானரிசி
வீரியப்பிசின்—சாலாம்பிசின்
வீரைச்செடி — வட்டத்திருப்பிச்செடி
வீழிச்செடி-விழுதிச்செடி
வீழ்ம்வயக்கொடி - கொடிச்சம்பங்கி
வீறுகநவ்வல்-கொடிநவ்வல்

# வெ

வெகுடுத்தட்டை - நாணல்தட்டை
வெகுட்சிமரம்-பூவரசுமரம்
வெகுபத்திரிமரம்—அரிநெல்லிமரம்
வெகுரகாலிமரம்-வெக்காலிமரம்
வெகுரசத் தட்டை-கரும்புத்தட்டை
வெகுராசகப்பூண்டு-வெங்காயப்பூண்டு
வெகுலாங்கப்பாளை - ஆடுதின்னாப்பாளைக்கொடி
வெகுவாதகவேர்-வெட்டிவேர்
வெகுலாதிகம்-சிற்றேலம்
வெகுளாதிகப்பாக்கு - வெட்டுப்பாக்கு
வெக்காலிமரம்-வெண்காலிமரம்
வெங்காயப்பூண்டு-ஈரவெங்காயப்பூண்டு
வெங்காரம்-வெண்காரம்
வெடி-வெடியுப்பு
வெடிகாரம்-சிலைக்காரம்
வெடுபாலைமரம்—பாலைமரம்
வெட்சிப்பூச்செடி—சுவேதகிச்செடி
வெட்டிவேர்-இருவேலிவேர்
வெட்டுணிமூலம்-திப்பிலிமூலம்
வெட்டுப்பாக்கு - லவங்கச்சில்பாக்கு
வெட்பளாவிக மரம்-வெள்வேலாமரம்
வெட்பாலை மரம்-பாலைமரம்
வெட்பாவட்டைச்செடி-ஆடாதோடைச்செடி
வெண்கடம்புமரம்-கடம்புமரம்
வெண்கடலித் தேக்கு—வெந்தேக்குமரம்
வெண்கடலை-வெண்முதிரைக்கடலை

வெண்கடிகப் பாலைமரம்-வெப்பாலைமரம்
வெண்கடுகு-வெள்ளைக்கடுகு
வெண்கட்டுக்கொடி - சிறுகட்டுக்கொடி
வெண்கண்டங் கத்திரி-வெள்ளைக்கண்டங்கத்திரிக்கொடி
வெண்கராசிகப்பாலை. வெப்பாலைமரம்
வெண்கருங்காலி மரம்-வெக்காலிமரம்
வெண்கரும்பு - ஆலைக்கரும்புத்தட்டை
வெண்கலிக்கடுகு-வெண்கடுகு
வெண்களற்சிக்கொடி - களற்சிக்கொடி
வெண்களிக்கரும்பு-வெண்கரும்புத்தட்டை
வெண்காக்கட்டான்-காக்கட்டான்கொடி
வெண்காக்கிய மிளகு-வெண் மிளகு
வெண்காந்தல்மலர்-காந்தண்மலர்
வெண்காலிமரம்-வெக்காளிமரம்
வெண்கிலுகிலுப்பைச்செடி.பேய்மிரட்டிச்செடி
வெண்கீரைத்தண்டு — வெள்ளைக்கீரைத்தண்டு
வெண்குகக் கடலை-வெண்கடலை, சிறுகடலை
வெண்குங்கிலியம்.வெள்ளைக்குங்கிலியம்
வெண்குண்டாகிகம்-வெங்தயம்
வெண்குண்டுமணி - வெள்ளைக்குண்டுமணி
வெண் குந்திரிக்கம்-வெண் குங்கிலியம்
வெண்குப்பைமேனி - குப்பைமேனி
வெண்குமுதக் கொடி-வெள்ளாம்பற்கொடி
வெண்கூதாளக் கொடி-தாளிக்கொடி
வெண்கொடிவேலி.கொடிவேலிச்செடி
வெண்கொம்பன்பாகல்-வெள்ளைக்கொம்பன்பாகற்கொடி
வெண்கொம்புப்புடல் - பேய்ப்புடற்கொடி
வெண்கொய்யாமரம் - வெள்ளைக்கொய்யாமரம்
வெண்கொறண்டிச்செடி - முட்குறண்டிச்செடி
வெண்கொழுஞ்சி - வெள்ளைக்கொழுஞ்சிச்செடி
வெண்கொள்ளுச்செடி-நரைகொள்ளுச்செடி
வெண்கோடப் பட்டை-அக்காரப்பட்டை
வெண்சலசக் கொடி - வெண்டாமரைக்கொடி
வெண்சாரணை.வெள்ளைச்சாரணைக்கொடி
வெண்சித்தகத்தி மரம்-வெண்சம்பைமரம்
வெண்சிவதை-சிவதைவேர்
வெண்சீந்திற்கொடி-அமுதவல்லிக்கொடி
வெண்செவ்வந்தி-வெண் சாமந்திப்பூச்செடி
வெண்டாழைமரம்-தாழைமரம்
வெண்டுமிளகாய்-குண்டுமிளகாய்
வெண்டேக்கரும்பு-வெண்கரும்புத்தட்டை
வெண்டைச் செடி-வெண்டிச்செடி
வெண்ணாகம்-வெள்ளீயம்
வெண்ணாங்குமரம்-ஓடைமரம்
வெண்ணாரைமரம்-நாரைமரம்

வெண்ணாவல்மரம்-வெள்ளை நாவல்மரம்
வெண்தினை-தினை
வெண்தீவிரக்கொடி-வெண்காக்கட்டான்கொடி
வெண்துத்தி-பால்துத்திச்செடி
வெண்துருவாதிதம்-வெண்குங்கிலியம்
வெண்துவரை-வெள்ளைத் துவரை
வெண்தூதகிக்கொடி-வெண்சாரணைக்கொடி
வெண்தூதுவளை - வெள்ளைத் தூதுவளைக்கொடி
வெண்தொயிலிக்கீரை-துயிலிக்கீரைச்செடி
வெண்நவ்வல் - வெண்நாவல்மரம்
வெண்நொச்சி - ஐந்திலைநொச்சிச்செடி
வெண்பகீரதிக்கிழங்கு-வெந்தோன்றிக்கிழங்கு
வெண்பசலிக்கொடி-சுவேதப்பசலிக்கொடி
வெண்பச்சைக் கடலை-வெள்ளைப்பச்சைக்கடலை
வெண்பாதிரிமரம்-பாதிரிமரம்
வெண்புரச மரம்-வெண்போதமரம்
வெண்பூலிவிதை-பூலிவிதை
வெண்மணிச்செடி-நறுவிழிச்செடி
வெண் மாதுளை-வெள்ளைமாதுளைச்செடி
வெண்மிளகாய்-வெள்ளை மிளகாய்
வெண்மிளகியரிசி-நெல்லரிசி
வெண்மிளகு-சுவேதமிளகு
வெண்மிளகுதக்காளி - மிளகுதக்காளி
வெண் மூளகாய்-சுவேதமிளகாய்
வெண்முள்ளிக்கீரை - முள்ளிக்கீரை
வெதிர்காமரம்-மூங்கில்மரம் (வை

வெதுப்பச்சூரி விரை - நத்தைச்சூரிவிரை
வெதுப் படக்கி-தலை சுருளிக்கொடி
வெதும்பாச் செடி-வெள்ளையாளைச்செடி
வெந்தநெல்லரிசி-புழுங்கலரிசி
வெந்தபிகிரி-சுடுபிணம்
வெந்தயச்செடி-விமலோதயச்செடி
வெந்தலமரம்-குங்கிலியமரம்
வெந்தலயம்-வெந்தயம்
வெந்தேக்கிரி-தீயெரிதல்
வெந்தேக்குமரம்-பிள்ளைத் தேக்கு
வெந்தேட்கொடுக்குச்செடி - பெருந்தேட்கொடுக்குச்செடி
வெந்தோதிக விரை - அழிஞ்சில்விரை
வெந்தோன்றிகாச் செடி-கண்ணுப்பீளைச்செடி
வெந்தோன்றிக் கிழங்கு-நாவிக்கிழங்கு
வெப்பாலைமரம்-பாலைமரம்
வெம்பிளிக்கைச்செடி - செவ்வெருக்கிலைச்செடி
வெய்யோன்-சூரியன்
வெருகடி - மூன்றுவிரல்கொண்டது
வெருகடுக் கொடி - பூனைக்காலிக்கொடி
வெருகங்கிழங்கு - பெருகன் கிழங்கு
வெருகாமுள்ளி விரை-நீர்முள்ளிவிதை
வெருணிச்செடி-பாவட்டைச்செடி, ஆடுதீண்டாப்பாளைச்செடி
வெருவந்தக் கொடி-சௌந்திரியக்கொடி
வெலிகம்-கற்றாழை
வெலிகாக்கீரை-சொக்காக்கீரை

வெல்லம்-கரும்பின் வெல்லம்
வெளிச்சிப்பிசின்-விளாம்பிசின்
வெளித்தாமரை - ஆகாயத் தாமரை
வெளித்துகமரம்-மருக்குமரம்
வெளிநீர்-ஆகாயநீர்
வெளிறுமரம்-நறுவிளிமரம்
வெளுப்பத்தி-எலும்பு
வெள்வெங்காயம்-வெள்ளைவெங்காயம்
வெள்வெற்றிலை-கற்பூர வெற்றிலை
வெள்வேலா மரம் - பெருவேலா மரம்
வெள்வேலிகக்கொடி-வேலிப்பருத்திக்கொடி
வெள்ளகில்மரம்-அகில்மரம்
வெள்ளரளிச் செடி - பாலரளிச் செடி
வெள்ளராதீதக் கொடி-வெண்சாரணைக்கொடி
வெள்ளரிக்கொடி-அரிக்கொடி
வெள்ளரிப்பூசணிக் கொடி-பிளாம்பூசணிக்கொடி
வெள்ளறுகுச்செடி.வெள்ளையறுகுச்செடி
வெள்ளணிமரம்-வெண் பாதிரி மரம்
வெள்ளாட்டுப்பால்-கருப்பாட்டுப்பால்
வெள்ளாம்பல்மலர்-வெள்ளையல்லிமலர்
வெள்ளிண்டு-நுரையிண்டு கொடி
வெள்ளிலை-வெற்றிலை
வெள்ளுகாமரம்-உகாமரம்
வெள்ளுப்பு-கடற்பாரையுப்பு
வெள்ளெருக்குச் செடி - சுவேத வெருக்குச்செடி
வெள்ளெலி-வெள்ளையெலி
வெள்ளைக்கடுக்காய்-அமிர்தக் கடுக்காய்
வெள்ளைக்கண்டங்கத்திரி-வெண் கண்டங்கத்திரிக்கொடி
வெள்ளைக்கரிசலாங்கண்ணி.கரிப்பான்செடி
வெள்ளைக் கற்கண்டு-சீனிக் கற்கண்டு
வெள்ளைக்காக்கணக்கொடி - வெண்காக்கணத்திக்கொடி
வெள்ளைக்கிலுகிலுப்பை - கிலுகிலுப்பைச்செடி
வெள்ளைக்குங்கிலியம்-வெண்குங்கிலியம்
வெள்ளைச்சங்கு-சங்கஞ்செடி
வெள்ளைச்சதிகமிளகு - வெண்மிளகு
வெள்ளைச்சாரணை-சுவேதச் சாரணைக்கொடி
வெள்ளைச்செவ்வந்தி - வெண்செவ்வந்திச்செடி
வெள்ளைச் சோளம் - அரிச் சோளம்
வெள்ளைத்தாமரை - வெண்தாமரைக்கொடி
வெள்ளைத்தொட்டாற்சிணுங்கி-வெண்விஷசணிச்செடி
வெள்ளைநாவிக்கிழங்கு - நாவிக்கிழங்கு
வெள்ளைநாவினிக்காய்-வெள் வேலாங்காய்
வெள்ளைநீர்முள்ளி - சுவேதநீர்முள்ளிச்செடி
வெள்ளைப்பசலிக்கொடி-வெண்பசலிக்கொடி
வெள்ளைப்பாகற்கொடி - வெண் பாகற்கொடி
வெள்ளைப் பாஷாணம்-வெண்பாஷாணம்
வெள்ளைப்பாவட்டைச்செடி.இந்திரேயச்செடி

வெள்ளைப்புளிச்சற்கீரை-புளிச்சற்கீரை
வெள்ளைப்பூகிகக்கொடி-வெள்ளரிக்கொடி
வெள்ளைப்பூசணிக்காய் - பெரும்பூசணிக்காய்
வெள்ளைப்பூண்டு-வெள் வெங்காயப்பூண்டு
வெள்ளைமந்தாரை - வெண்மந்தாரைச்செடி
வெள்ளைமிளகு-வெண்மிளகு
வெள்ளை முள்முருங்கை-முள்ளுமுருங்கைமரம்
வெள்ளையகில் மரம் - வெண்காகதுண்டமரம்
வெள்ளையடுக்கரளி - சுவேதவடுக்கரளி
வெள்ளையத்திக்காய் - கல்லத்திக்காய்
வெள்ளையலரிச்செடி - அலரிச்செடி
வெள்ளையல்லிக்கொடி - அல்லிக்கொடி
வெள்ளையவரிச்செரி - அவுரிச்செடி
வெள்ளையவரைக்கொடி-குரும்பவரைக்கொடி
வெள்ளையவுரி-அவுரிச்செடி
வெள்ளையாவிகமரம்-ஆவிமரம்
வெள்ளையாமணக்கு - ஆமணக்குச்செடி
வெள்ளையாமிதக் கீரை-வெண்முள்ளிக்கீரைச்செடி
வெள்ளையரவரை-சுசியாவரை
வெள்ளையிரு கொல்லி - வெண்சதாகதமரம்
வெள்ளையிருள்ளி-சருள்ளிப்பூண்டு
வெள்ளையூதிதம்-வெண்கடுகு
வெள்ளையூமத்தை - ஊமத்தைச்செடி
வெள்ளைவெள்ளு-கரைவெள்ளு
வெள்ளைவாக்கப்பால் - வெள்ளெருக்குப்பால்
வெள்ளைவாடாமல்லிகை - பால்வாடாமல்லிகைச்செடி
வெள்ளை வாதரக்காட்சிமரம்-வாதரக்காட்சிமரம்
வெள்ளைவிஷ்ணுகரந்தை-சுவேதவிஷ்ணுகரந்தை
வெள்ளை வெட்சிப் பூச்செடி-வெட்சிப்பூச்செடி
வெள்ளைவெற்றிலை - சுவேதவெற்றிலை
வெள்ளைவேலிகச்சிமிட்டி - சிமிட்டிச்செடி
வெள்ளை வேலன்மரம் - வெள்வேலாமரம்
வெறிக்கடுக்காய்-பேய்க்கடுக்காய்
வெறுகடி-மூன்றுவிரற்சேர்த்தல்
வெற்பு-மலை-பருவதம்,கிரி
வெற்றித்தண்டுச்செடி - துரையிண்டுச்செடி
வெற்றிலைக்கொடி-கருப்புவெற்றிலைக்கொடி
வெற்றிலைத்தண்டுலம் - வேம்பின்மேற்புல்லுருவி
வெற்றிலைவள்ளிக்கிழங்குக்கொடி-காகவள்ளிக்கிழங்குககொடி
வெற்றுகச்செடி-வட்டத்துத்திச்செடி
வெளமீலிகச்செடி - இருவேலிச்செடி

# வே

வேகிகக் கொடி-அடம்புக்கொடி
வேசிஙங்கைச்செடி - மிளகாய்நங்கைச்செடி
வேங்கைமரம்-திமிசுமரம்
வேசயப் பட்டை - லவங்கப்பட்டை

வேசயப்பத்திரி-லவங்கப்பத்திரி
வேசயப்பூ-லவங்கப்பூ
வேதகம்-கற்பூரம்
வேதவரிசி-வாலுளுவையரிசி
வேதவாரிதிச்செடி - கஸ்தூரியல ரிச்செடி
வேதன்காய்-கடுக்காய்
வேதிரிமரம்-இலந்தைமரம்
வேதை-ஏமம்
வேதைதக்கன்னிச்செடி - நாய்வே ளைச்செடி
வேதை விருட்சம்-உரோமவிருட் சம்
வேத்திரக் கோரை - உப்பங்கோ ரை
வேத்திரச் செடி-இலந்தைச்செடி
வேந்தன்பட்டை-அரசன் பட் டை
வேந்தன்மரம்-அரசமரம்
வேந்திசமிளகு-வெண்மிளகு
வேப்பமரம்-நிம்பமரம்
வேப்பம்பாசி-நிம்பப்பாசி
வேப்பாலிகமரம்-வெட்பாலைமரம்
வேப்பிலைநங்கை-மிளகாய்நங்கை
வேப்பூலிகவிரை - பூனைக்காலிவி ரை
வேம்பாடம்பட்டை - சாயப்பட் டை
வேம்பாதிகச்செடி - நிலவேம்புச் செடி
வேம்பின்மேற்புல்லுருவி — நிம்ப மேற்புல்லுருவி
வேம்புக்கொட்டை - வேப்பம்வி ரை
வேம்புமரம்-வேப்பமரம்
வேயரிசி-மூங்கிலரிசி
வேயல்மரம்-மூங்கில்மரம்
வேயிகாரம்-வெங்காரம்
வேய்மரம்-வேரல்மரம், மூங்கில் மரம்
வேரகக்கொடி - கற்பூரவல்லி க்கொடி
வேரல்மரம்-வேய்மரம்
வேரிச்சமச்செடி-வெள்ளெருக்கு ச்செடி
வேரிச்சூரிச் செடி-நத்தைச்சூரிச் செடி
வேரிச்செடி-இருவேலிச்செடி
வேரிணக்கிக்கொடி-பைதிரிதிக் கொடி
வேர்க்கடலை-நிலக்கடலை
வேர்க்காந்திச் செடி-விஷ்ணுகரந் தைச்செடி
வேர்க்கொம்பு-இஞ்சி
வேர்க்கொழுந்து-வேலங்கொழுந்து
வேர்ப்பலா-முட்பலா
வேர்ப்பேலகச்செடி-காட்டேலச் செடி
வேலாமரம்-கருவேலாமரம்
வேலாமுற்றுழை-கடற்றுழை
வேலாமேற்புல்லுருவி.வேலின்மே ற்புல்லுருவி
வேலாரைக் கொடி - கடலாரைக் கொடி
வேலிக்கொடி - வேலிப்பருத்திக் கொடி
வேலிக் கொவ்வைக்கொடி-சேகா வைக்கொடி
வேலிப்பருத்திக் கொடி-உத்தாமணிக்கொடி
வேலின்மேற்புல்லுருவி - விதூக மேற்புல்லுருவி
வேலித்தட்டை-கரும்புத் தட் டை
வேலிமுள்-கருவேல்முள்
வேல்மரம்-வேலாமரம்
வேல்முகக் கொடி - கல்லாரைக் கொடி
வேழகக்கொடி-பீர்க்குக்கொடி
வேழதிமரம்-மூங்கில்மரம்
வேழாகிகக் கொட்டை - பூந்திக் கொடி
வேழத் தட்டை - கரும்புத் த டை
வேளாதாமரம்-வைம்புரசப

வேளுகிப்பட்டை-வேம்பாடம்பட்டை
வேளுசிக்கட்டை-அகிற்கட்டை
வேளைச்செடி-தைவேளைச்செடி
வேறினக்கி-கற்பவுற்பத்தி
வேனில்நீர்-எச்சிலுமிழ்நீர்

# வை

வைகுராச்செடி-தும்பைச்செடி
வைகுண்ணியமரம் - பேரிலந்தைமரம்
வைக்கிராந்தபாஷாணம்- குமுதபாஷாணம்
வைக்கிராந்திதச் செடி-கிரந்திநாயகச்செடி
வைசயந்திக்கொடி-வாதமடக்கிக்கொடி
வைசினி-பீஷம், ஆண்குறிக்குக்கீழிருக்கும்விரை
வைதகிகம்-திப்பிலி
வைதவாலச்செடி - காருகத்திரிச்செடி
வைதேகிகம்-திப்பிலி
வைத்திரேயமரம்-கானல்மாமரம்
வைநாகணத்திக்கொடி - காக்கட்டான்கொடி
வைநாகதவுப்பு-கரியுப்பு
வைநாகப்பூ-சிறுநாகப்பூ
வைநாகப்போளம்-கரியபோளம்
வைநாக மல்லி - நாக மல்லிகைச்செடி
வைநாகமாலிமரம்-காஞ்சிரைமரம்
வைநாகமுட்டிமரம் - விஷமுட்டிமரம்
வைநாசிகச்செடி - கானல்மிளகாய்ச்செடி
வைம்புரசமரம்-கரும்புரசமரம்
வையாரிகப் பட்டை-கிழியூரற்பட்டை

# வௌ

வௌசாலகப்பூடு-மல்லைப் பூடு
வௌாசாலிக்கொட்டை-தேற்றுங்கொட்டை
வௌசிகக் கொடி-தாமரைக்கொடி
வௌசிகா முள்ளி — நீர்முள்ளிச்செடி
வௌசிகிக்கொழுந்து—மருக்கொழுந்துச்செடி
வௌசேகப்புல்-முயற்புல்
வௌசேநிகக் கொட்டை-எட்டிக்கொட்டை
வௌவாவியமரம்-மாமரம்
வௌவியாத்தாழைமரம் - மஞ்சட்டாழைமரம்
வௌவுதக் கொடி-வனமல்லிகைக்கொடி
வௌதவிமரம்-மாமரம்
வௌவுதமவாழைமரம் - மலைவாழைமரம்

முற்றிற்று.

இதிற்கண்ட மூலிகைகள், மருந்துகள் யாவும் அசல் பெயர் இன்னதென்று தொகை யகராதியில் நன்றாய் விளங்கும். ஷை அகராதியைப் பார்த்துக் கொள்ளவும்.

உ

சித்த வைத்திய

# மருந்து பச்சிலை மூலிகைகளின்
# தொகையகராதி.

## அ

அகணிக்காய்

அகத்திமரவகை
- அகத்திமரம்
- செவ்வகத்திமரம்
- பேயகத்திமரம்
- சீமையகத்திச்செடி ஆக 4

அகில்மரவகை
- அகில்மரம்
- செவ்வகில்மரம் ஆக 2

அக்கிராகாரச்செடி

அசோகுமரம்

அச்சஞ்செடிவகை
- அச்சஞ்செடி
- கெவுரியச்சஞ்செடி
- அச்சமரம் ஆக 3

அண்டம்வகை
- சிற்றண்டம்
- பேரண்டம்
- எரண்டம் ஆக 3

அதலைக்காய்க்கொடி

அதிங்குச்செடி

அதிமதுரம்

அதிவிடையவகை
- அதிவிடையம்
- யானைக்கொம்பனதிவிடையம் ஆக 2

அத்திவகை
- அத்தி
- கல்லத்தி
- காட்டத்தி
- சீமையத்தி
- கொடியத்தி
- குருக்கத்தி ஆக 5

அந்திமல்லிகைவகை
- அந்திமல்லிகை
- மஞ்சளந்திமல்லிகை
- நீலவர்ண அந்திமல்லிகை
- வெள்ளையந்திமல்லிகை ஆக 4

அமுக்கிராச்செடி

அம்மான்பச்சரிசெடிவகை
- அம்மான்பச்சரிச்செடி
- சின்னம்மான்பச்சரிச்செடி
- பெரியசிவப்பம்மான்பச்சரிசி
- சின்னசிவப்பம்மான் பச்சரிசி ஆக 4

அரக்குவகை
- அரக்கு
- கொம்பரக்கு ஆக 2

அரசுவகை
- அரசு
- கொடியரசு
- புண்ணியவரசு ஆக 3

அரத்தைவகை
- சிற்றரத்தை
- பேரரத்தை ஆக 2

**அரளிவகை**
வெள்ளையரளி
ஷை அடுக்கரளி
செவ்வரளி
ஷை அடுக்கரளி
கஸ்தூரியரளி
ஆக்கரளி
வெள்ளைக்காசரளி
சிவப்புக்காசரளி
தங்கரளி
சிறுதங்கரளி
மலையரளி ஆக 11

**அரிசிவகை**
புழுங்கநெல்லரிசி
பச்சைநெல்லரிசி
கருப்புநெல்லரிசி
மட்டைநெல்லரிசி
மலைநெல்லரிசி ஆக 5

**அரிவாள்மூக்குச்செடி**

**அரைக்கீரைவகை**
அரைக்கீரை
சிவப்புஅரைக்கீரை ஆக 2

**அல்லிவகை**
வெள்ளையல்லி
சிவப்புஅல்லி
ஊதாஅல்லி ஆக 3

**அவரைவகை**
வெள்ளையவரை
சிவப்பவரை
வட்டவரை
பேயவரை
கோழியவரை ஆக 5

**அவுரிச்செடிவகை**
அவுரி
பெரியவுரி ஆக 2

**அழிஞ்சில்வகை**
ஏமழிஞ்சில்
இறகழிஞ்சில்
கடலழிஞ்சில்
கூவழிஞ்சில் ஆக 4

**அறுகுவகை**
அறுகு
உப்பறுகு
கொடியறுகு
யானையறுகு ஆக 4

**அறுகுச்செடிவகை**
கருப்பறுகுச்செடி
சிவப்பறுகுச்செடி
வெள்ளையறுகுச்செடி ஆக 3

**அனிச்சைமரம்**

# ஆ

**ஆக்ருடனமூலிகைவகை**
தூடரிவேர்
உள்ளொட்டி
புறவொட்டி
சிறுமுன்னை
குப்பைமேனி
தலைச்சுருளி
சிறியாணங்கை
அழுகண்ணி ஆக 8

**ஆச்சாமரம்**

**ஆடாதோடைச்செடி**

**ஆடுதிண்டாப்பாளை**

**ஆட்டுலாமரம்**

ஆதளைவகை
வெள்ளையாதளை
சிவப்பாதளை
பெரியாதளை ஆக 3

ஆத்திவகை
ஆத்தி
காட்டாத்தி
செவ்வாத்தி
ஊழலாத்தி
திருவாத்தி
விளாத்தி ஆக 6

ஆமணக்குவகை
ஆமணக்கு
செவ்வாமணக்கு
சித்தாமணக்கு
உரலாமணக்கு
கடலாமணக்கு
காட்டாமணக்கு
புல்லாமணக்கு ஆக 7

ஆயிலியமரம்

ஆரைவகை
ஆரை
கடலாரை
கல்லாரை
புளியாரை
வல்லாரை ஆக 5

ஆலமரவகை
ஆலமரம்
கல்லாலமரம்
பேயாலமரம் ஆக 3

ஆவரைவகை
வெள்ளையாவரை
ஆவரை
கொடியாவரை
சடலையாவரை
பொன்னாவரை
சூரத்தாவரை ஆக 6

ஆவிமரம்

ஆளிவகை
ஆளி
கருத்தாளி ஆக 2

ஆள்வாடைதட்டிச்செடி

# இ

இச்சிமரம்

இஞ்சிமரவகை
இஞ்சி
காட்டிஞ்சி ஆக 2

இண்டுவகை
இண்டு
செவ்விண்டு
நரையிண்டு ஆக 3

இம்புராச்செடி

இருப்பவட்செடி

இரும்பகமரவகை
இரும்பகமரம்
பாலிரும்பகமரம் ஆக 2

இருவாட்சிவகை
இருவாட்சிச்செடி
இருவாட்சிமரம்
கருக்குவாட்சி மரம் ஆக 3

இலட்சைக்கட்டைமரம்

## இலந்தைவகை

இலந்தை
கொடியிலந்தை
காட்டிலந்தை
புளிப்பிலந்தை ஆக 4

## இலவமரவகை

இலவமரம்
கோங்கிலவமரம்
முள்ளிலவமரம் ஆக 3

## இலுப்பைவகை

இலுப்பை
காட்டிலுப்பை ஆக 2

# ஈ

## ஈஞ்சுவகை

ஈஞ்சு
பேரீஞ்சு
காயாப்பேரீஞ்சு ஆக 3

## ஈருவல்லிமரவகை

ஈருவல்லிமரம்
சொத்தையீருவல்லிமரம்
வெள்ளையீருவல்லிமரம் ஆக 3

# உ

## உகாமரவகை

உகாமரம்
செவ்வுகாமரம்
வெள்ளுகாமரம் ஆக 3

## உசில்மரவகை

உசில்மரம்
ஊடுசில்மரம் ஆக 2

## உச்சாடணமூலிகைவகை

வரற்சுண்டி
மான்செவிக்கள்ளி
பெருங்கிலுகிலுப்பை
அரமுறி
கண்டங்கத்திரி
நரிமிரட்டி
தேட்கொடுக்கு
கரந்தை ஆக

## உடைமரவகை

உடைமரம்
பேருடை மரம் ஆக

## உதியமரம்

## உதிரிமாரிமரம்

## உபரசச்சரக்குவகை

அஸ்திபேதி
அஞ்சனம்
அப்பிரகம்
அயமலே
அன்னபேதி
ஆட்டுக்கொம்பு
ஆமையோடு
இந்திரகோபம்
இரசிதச்சிலை
இரசிதகிமிளை
இரசிதமணல்
இராசவர்த்தனக்கல்
ஈரக்கல்
உலோககிமிளை
உலோகம்
உவர்மண்
ஊசிக்காந்தம்
எலிமுள்
எலும்பு
ஏமமலை
ஏமம்

ஒட்டுக்கல்
ஒட்டுக்காந்தம்
கஞ்சநிமிளை
கடல்நுரை
கடற்பாசி
கண்டகச்சிலை
கதண்டு
கஸ்தூரியெலும்பு
கருங்கல்
கருஞ்சுக்கான்
கருடப்பட்சிக்கல்
கருமணல்
கருவண்டு
கலைக்கொம்பு
கல்நார்
கற்காந்தம்
கன்மதம்
காஸ்மீரப்படிக்கல்
காகச்சிலை
காகநிமிளை
காடி.
காண்டாமிருகம்
காந்தம்
காரீயமணல்
காரூரச்சிலை
காவிக்கல்
கானற்கல்
கிருஷ்ணாப்பிரகம்
குருந்தக்கல்
கோமேதகம்
கோழி
சங்கு
சாத்திரபேதி
சாலக்கிராமம்
சிப்பி
சிலாநாகம்
சிலாவங்கம்
சிவப்பு
சுக்கான்கல்
சுத்தக்கருப்புமண்
சுவேத அப்ரேகம்
சூடாலைக்கல்
செங்கல்
செம்புமணல்
செம்புமலை
செம்மண்
செவ்வட்டை
செவ்வப்பிரகம்
சொர்ணபேதி
தங்கம்
தந்தம்
தவளைக்கல்
திராமலை
துருசு
தேகக்கல்
நண்டு
நத்தை
நவரத்தினம்
நாகப்பச்சை
நாகமலை
நாகம்
நாகரவண்டு
நீலம்
பச்சை
பவளம்
பன்றிமுள்
பித்தளைமலை
புட்பராகம்
புற்றுன்பழம்
பூநாகம்
பேரோசனை
பொன்னப்பிரகம்
பொன்னிமிளை
மஞ்சட்கல்
மண்டூகம்
மந்தாரச்சிலை
மயிர்
மயிலிறகு
மரகதப்பச்சை
மல்லி

பனேசிலை
மாக்கல்
மாங்கிசச்சிலை
மாட்டுக்கொம்பு
மாந்துளிர்க்கல்
மீனெலும்பு
முடவாட்டுக்கால்
முட்சங்கு
முட்டை
முத்து
முத்துச்சிப்பி
வயிரம்
வராகக்கொம்பு
வெண்கலமலை
வெண்சுக்கான்
வெள்ளி
வெள்ளியமணல்
வெள்ளியமலை
வைடூரியம் ஆக 120

உப்பாகுஞ் சரக்குவகை

அண்டம்
அப்பிரேகம்
இரும்பு
கடல்நுரை
கல்லுப்பு
காந்தம்
கிளிஞ்சிலோடு
கௌரி
சங்கு
சாரம்
சூடன்
சூதம்
தங்கம்
தொட்டி
நாகம்
நாதம்
பச்சைக்கற்பூரம்
வீரம்
வெடியுப்பு
வெண்கருவு
வெள்ளை
வைக்கிராந்தம் ஆக 22

உப்புவகை

கல்லுப்பு
வெடியுப்பு
இந்துப்பு
வழலையுப்பு
வளையலுப்பு
சவுட்டுப்பு
உவருப்பு
அமுரியுப்பு
கற்பூரவுப்பு
திலாலவணம்
அப்புலவணம்
கெந்திலவணம்
சிந்துலவணம்
காய்ச்சுலவணம்
சாரம்
எவாச்சாரம்
சத்திசாரம்
சிவசாரம்
சீனக்காரம்
ஏகம்பச்சாரம்
வெங்காரம்
சூடன்
கடல்நுரை
பொன்னம்பர்
மீனம்பர் ஆக 25

உமூரிச்செடி
உரம்
உருக்குஞ் சரக்குகளுக்குச்சத்துரு

அயம் உருக்குகையில்

கெந்தி
மனோசிலை
தாளகம்

நிமிளை
மிர்தார்சிங்கி
வெள்ளைப்பாஷாணம்
வீரபாஷாணம்
சாரம்
வைக்கிராந்தம்
கோழிக்கெந்தி
அஞ்சனப்பாஷாணம்
இணங்கன்
சுரைக்காய்க்கெந்தி
குதிரைப்பற்பாஷாணம் ஆக 14

இந்தச் சரக்குகளிற் செந்தூரங்கள்செய்து அயம் உருக்குகையிற் கொடுத்தாற் கரிபாய்க்கெட்டுப்போகும். மற்றச்சரக்குகளெல்லாமாகும்

## கருநாகம் உருக்கையில்

நிமிளை
மனோசிலை
கெந்தி
அபிரேகம்
கபரிப்பாஷாணம்
அஞ்சனப்பாஷாணம்
கௌரிப்பாஷாணம்
வெள்ளி ஆக 8

இந்தச்சரக்குகளிற் செந்தூரங்கள்செய்து கருநாகம் உருக்குகையிற் கொடுத்தாற் கருகிக்கெட்டுப்போகும். மற்றச் சரக்குகளெல்லாமாகும்

## செம்பு உருக்குகையில்

கருநாகம்
நிமிளை
சிங்கி
வங்கம்
வெள்ளைப்பாஷாணம்
தொட்டிப்பாஷாணம்
கௌரிப்பாஷாணம்
பூமாது
பஞ்சபக்ஷி
அஞ்சனக்கற்பாஷாணம்
கெந்தி ஆக 11

இந்தச்சரக்குகளிற் செந்தூரங்கள்செய்து செம்பிற்கொடுத்தால்கெட்டுப்போகும்

## வெண்காரம் பித்தளை அத்தம் ௬ சரக்குகளு முருக்குகையில்

கருநாகத்திற்குச் சொன்ன சரக்குகளாற் களங்கு செந்தூரங்கள் செய்து கொடுத்தாற் கருகிக்கெட்டுப்போகும். மற்றச் சரக்குகளெல்லாமாகும்.

## வெள்ளி உருக்குகையில்

வெள்ளீயம்
நாகம்
நிமிளை
காந்தம்
தீமுருகற்பாஷாணம்
கபரிப்பாஷாணம்
பஞ்சபக்ஷிப்பாஷாணம்
கம்பியுப்பு
சீனம்
சாரம்
குதிரைப்பற்பாஷாண[illegible]
பவழப்புத்து

இந்தச்சரக்குகளிற் [illegible]

குகளெல்லாமாகும்

படிகாரம்
இந்துப்பு
கல்லுப்பு
வெண்காரம்
லிங்கம்
வீரம் ஆக 6

இச்சரக்குகள் எவைக்குஞ் சத்து
ருமித்துருக்களல்லவாம்

## உருக்குஞ் சரக்குகளுக்குமித்துரு

### வெண்காரம்

காரசாரம்
சூடன்
படிகாரம்
குன்றி
வெண்கருவு
சாரம்
இந்துப்பு
மெழுகு
வெள்ளை
தேன்
வெல்லம்
காரம்
நெய்
துருசு
கருரங்கு
தாளகம்
வீரம்
சவுக்காரம் ஆக 18

இவைகள் மித்துருவாம்

வெள்ளை
குன்றி
காரம்
சாரம்
சர்க்கரை
எலுமிச்சை
ஏரண்டம்
புராவெச்சம்
குக்கில்
மெழுகு
ரங்கு ஆக 11

இவைகள் சகலத்துக்கும் மித்து
ருவாகும்

### சவுக்காரம்

வர்த்தனைக்கல்
புளி
குக்கில்
காரம்
சாரம்
முயலெலும்பு
யானைத்தந்தம்
குதிரைக்குளம்பு
சேவல்
குன்றி
கலைக்கொம்பு
மூடக்கொழுஞ்சிவேர்
தாளகம்
எருமைக்கொம்பு
ரங்கு
வீரம்
எரியாலம்வித்து
பேய்ப்பீர்க்கு
புரசம்வித்து
வெள்ளைப்பாஷாணம்
மெழுகு ஆக 21

இவைகளை சூரணித்து சகலத்தி
ற்குஞ் சேர்க்க மித்துருவாம்

உருக்கினத்தாதிசத்து

### ஏகம்பச்சாரம்

வெண்காரம்
நவச்சாரம்
படிகாரம்
குன்றி ஆக 4

### வெண்கரு

நெய்
துருசு
கருரங்கு
தாளகம்

வீரம்
சவுக்காரம்
வெள்ளை
குன்றி
காரம்
சாரம்
சர்க்கரை
ஏரண்டம்
புராவெச்சம்
குங்கிலியம்
மெழுகு
வர்த்தனை
கம்பளி
முயலெலும்பு
யானைத்தந்தம்
குதிரைக்குளம்பு
சேவல்
கலைக்கொம்பு
முற்கொழுஞ்சி
எருமைக்கொம்பு
சங்கு
எலியாமணக்குவித்து
பேய்ப்பீர்க்கு
புரசம்வித்து ஆக 28

இவைகள் சமன்சேர்த்துச் சூரணித்து உபரசங்கள் நவலோகங்களில் சேர்க்க கந்தாகும். இதையே உபரசங்களில் சேர்க்க சத்தாகவும் கடுஞ்சரக்குகளில் சேர்க்க மிருதுவாகவும் மூலிகைகளில்சேர்க்க செம்பாகவும் மணியாகவுமுருக்க உருக்கினத்தாதிசத்தாகும்

நீற்றினத்தாதிசத்து

புனுகு
வீரம்
பூரம்
குருவண்டு
உரம்
சூதம்
கார்முகில்
சவுக்காரச்சுண்ணம்
சூடன் ஆக 9

இவைகள் நீற்றினத்தாதி சத்தாகும் மற்றவை சேர்ந்தாலாகா

செந்தூரத்தாதிசத்து

உபரசங்கள்
நவலோகங்கள்
பாஷாணங்கள்
காரம்
சாரம்
சூதம் ஆக 6

இவைகள்செந்தூரத்தாதிசத்தாகும் மற்றவைகள் சேர்ந்தாலாகாது

மால்தேவி
மனோசிலை
கெந்தி
கௌரி
அபிரேகம்
துத்தம்
வெடியுப்பு ஆக 7

இவைகள்செந்தூரத்தாதிசத்தாகும் மற்றவை சேர்ந்தாலாகா

வர்ணச்சரக்கு

உப்பு
நாகம்
தங்கம்
உபரசம்
நிமிளை
சூதம்
கௌரி ஆக 7

இவைகள் சேர்ந்தால் ஏமவாதமாகும். இல்லாவிடிற் பொன்னாகாது

உருத்திராட்சம்

## ஊ

ஊக்குணமரம்

ஊமத்தைவகை
- ஊமத்தை
- கருவூமத்தை
- கொடியூமத்தை
- பொன்னூமத்தை
- மருளூமத்தை ஆக 5

ஊறுகாய் வகை
- எலுமிச்சங்காய்
- மாங்காய்
- பச்சைமிளகாய்
- நெல்லிக்காய்
- களாக்காய்
- இஞ்சியூறுகாய் ஆக 6

## எ

எட்டிமரம்

எண்ணெய்வகை
- நல்லெண்ணெய்
- விளக்கெண்ணெய்
- வேப்பெண்ணெய்
- புங்கெண்ணெய்
- இலுப்பெண்ணெய்
- சீமையெண்ணெய்
- தேங்காயெண்ணெய்
- கடலையெண்ணெய்
- சித்தாமணக்கெண்ணெய்
- மயில்காலெண்ணெய் ஆக 10

எருக்கிலைவகை
- எருக்கிலைச்செடி
- வெள்ளையெருக்கிலைச்செடி
- எருக்கிலைமரம் ஆக 3

எருமைநாக்கிச்செடி

எலிச்செவிக்கீரைவகை
- எலிச்செவிக்கீரை
- சிவப்பெலிச்செவிக்கீரை ஆக 2

எலுமிச்சைவகை
- எலுமிச்சை
- இனிப்பெலுமிச்சை
- காட்டெலுமிச்சை
- கொடியெலுமிச்சை ஆக 4

எழுத்தாணிப்பூண்டுவகை
- எழுத்தாணிப்பூண்டு
- சின்னவெழுத்தாணிப்பூண்டு ஆக 2

எழுமுள்மரம்

எள்ளுவகை
- எள்ளு
- வெள்ளையெள்ளு
- காரெள்ளு
- பேயெள்ளு ஆக 4

## ஏ

ஏலம்வகை
- ஏலம்
- சிற்றேலம்
- காட்டேலம் ஆக 3

## ஐ

ஐவிரலிச்செடி

## ஒ

ஒடுவைவகை
- ஒடுவைச்செடி
- ஒடுவைமரம் ஆக 2

ஒட்டுவகை
சதையொட்டி
பிறவொட்டி
உள்ளொட்டி
ஆடையொட்டி ஆக 4

ஒட்டுப்புல்வகை
ஒட்டுப்புல்
தலையொட்டிப்புல் ஆக 2

ஒட்டைமரம்

ஒரளிச்செடி

## ஓ

ஓமவகை
ஓமம்
குரோசாணி யோமம் ஆக 2

## ஔ

ஔணிகம்

## க

கசகசாவகை
கசகசா
கருப்புக் கசகசா ஆக 2

கச்சோலம்

கஞ்சாங்கோரைவகை
கஞ்சாங்கோரைச்செடி
கஞ்சாங்கோரைப்புல் ஆக 2

கஞ்சாச்செடிவகை
கஞ்சாச் செடி
சடைக்கஞ்சாச்செடி ஆக 2

கடம்புவகை
கடம்பு
செங்கடம்பு
நிலக்கடம்பு
நீர்க்கடம்பு
மஞ்சட்கடம்பு ஆக 5

கடலைவகை
கடலை
கருங்கடலை
வெண்கடலை
பேய்க்கடலை
நிலக்கடலை
பட்டாணிக்கடலை ஆக 6

கடுகுவகை
கடுகு
வெண்கடுகு
நாய்க்கடுகு ஆக 3

கடுகுரோகணிவகை
கடுகுரோகணி
கருப்புக் கடுகுரோகணி ஆக 2

கடைச்சரக்குவகை
அதிமதுரம்
அதிவிடையம்
அரக்கு
வாக்கை

கடுகு
கடுகுரோகணி
கடுக்காய்
கருங்குங்கிலியம்
கஸ்தூரி
கஸ்தூரிமஞ்சள்

கருஞ்சீரகம்
கார்போகவரிசி
காசுக்கட்டி
காட்டுச்சீரகம்
கிராம்பு
குக்கில்
குங்குமப்பூ
குரோசாணி யோமம்
கூகைக்கிழங்கு
கெவுளா
கொடிவேலி
கோஷ்டம்
கோரோசனை
சடாமாஞ்சில்
சதகுப்பை
சாதிக்காய்
சாதிப்பத்திரி
சிறுதேக்கு
சிறுநாகப்பூ
சிவதைவேர்
சீரகம்
சுக்கு
செவ்வியம்
சேங்கொட்டை
தாளிசப்பத்திரி
தான்றிக்காய்
திப்பிலி
தேசாவரம்
நீர்வெட்டிமுத்து
நெல்லிவத்தல்
நேர்வாளம்
பற்படாகம்
பாக்கு
பூனைக்கண் குங்கிலியம்
பெருஞ்சீரகம்
மஞ்சள்
மரமஞ்சள்
மாச்சக்காய்
மிளகு
யானைத்திப்பிலி
லவங்கப்பத்திரி
ரோஜாமொட்டு
வசம்பு
வாய்விளங்கம்
வால்மிளகு
வாலுளுவையரிசி
வெண்கடுகு
வெண்குங்கிலியம்
வெண்மிளகு
வெந்தயம் ஆக 64

கட்டுக்கொடிவகை

சிறுகட்டுக்கொடி
பெருங்கட்டுக்கொடி
கருங்கட்டுக்கொடி ஆக 3

கண்டங்கத்திரிவகை

கண்டங்கத்திரி
வெண்கண்டங்கத்திரி
முள்ளிக்கத்திரி ஆக 3

கண்டில்வெண்ணெய்

கண்ணிச்செடிவகை

அழுகண்ணி
தொழுகண்ணி
காடைக்கண்ணி ஆக 3

கண்ணுப்பீழைசெடிவகை

கண்ணுப்பீழைச்செடி
சிறுகண்ணுப்பீழைச்செடி
ஆக 2

கத்திரிவகை

கத்திரி
காருகத்திரி
கொடிக்கத்திரி
செங்கத்திரி
பித்தக்கத்திரி
காட்டுக்கத்திரி
முள்ளுக்கத்திரி ஆக 7

